# உங்கள் குழந்தையை இந்தக் கோடையில் வேர்க்குரு எங்கு தாக்கும்?




வேர்க்குரு எங்கு தாக்கினாலும், அதை முறியடிக்க உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரில் மட்டுமே நிருபணம் பெற்ற மருந்துக் கலவை அடங்கியுள்ளது. அது மூன்று வழிகளில் செயலாற்றுகிறது.

- வியர்வையை உறிஞ்சுகிறது; சருமத் துவாரங்கள் அடைபடுவதைத் தடுக்கிறது.
- பாக்டீரியா கிருமிகள் பெருகுவதைத் தடுக்கிறது.
- சுகமும் குளுமையும் தந்து, உடனடி நிவாரணம் அளிக்கிறது.

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரைக் குளித்தவுடனும், படுக்கும் முன்பும் உடம்பின் மீது தாராளமாகத் தூவுங்கள். உடனடியாக வேர்க்குருவைத் தடுக்கத் தாய்மார்கள் நம்பும் மருந்து கலந்த வேர்க்குரு பவுடர் இது ஒன்றுதான்!




சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

## ஜான்ஸன்ஸ்* ப்ரிக்லி ஹீட் பவுடர் மட்டுமே உடல் எரிச்சலை நிறுத்துகிறது, அரிப்பிலிருந்து நிவாரணமளிக்கிறது உடனடியாக.

Johnson & Johnson*

இன்றைய ஜெம்ஷெட்பூர் என்னும் எஃகு நகரத்தை, துச்சமான முயற்சியாகக் கருதியவர்களிடையே இவர் கற்பனை செய்து, உருவாக்கினார்.

முன்னேற்றத்திற்கான வழி அறியாது இந்தியா உழன்று கொண்டிருந்த சமயத்தில் இவர் பெங்களூரில் இந்தியன் இன்ஸ்டிட்யூட் ஆஃப் ஸையன்ஸ் என்னும் ஸ்தாபனத்தை நிறுவினார். தேசத்தின் விஞ்ஞான அறிவுத் துறையில் அநேக கண்டுபிடிப்புகளை இந்த இன்ஸ்டிட்யூட் அளித்துள்ளது.

இத்தகைய மன உறுதி — எதிலும் முன்னோடியாக விளங்க வேண்டுமென்ற மன உறுதியை ஆதாரமாகக் கொண்ட வரையில், ஆண்டுகள் பல உருண்டோடினும் எங்கள் நிறுவனம் இளமை குன்றாது விளங்கும்.

நாங்கள் வளருகிறோம். ஆனால் அது காலத்தை அனுசரித்த வளர்ச்சியாகும்.

ஜெம்ஷெட்ஜி நஸ்ஸர்வான்ஜி டாடா
பிறப்பு, மார்ச் 3, 1839

# எஃகினை யொத்த மன உறுதி





**டாடா ஸ்டீல்**

HT-TIS-846/A

டாக்டர்கள் கூறுகிறார்கள்:

# 3 மாதங்கள் ஆன பிறகு, முழுமையான உடல் வளர்ச்சி பெற உங்கள் குழந்தைக்குத் தேவை திட உணவு.



**பாரெக்ஸ்**
உங்கள் குழந்தை சீராக வளர்ந்திட அனைத்தையும் அளிப்பதைப் பாருங்கள்: எளிதில் சீரணிக்கக்கூடிய புரதம், கூடவே வைட்டமின், கால்ஷியம், இரும்புச் சத்து மற்றும் கார்போஹைட்ரேட்.

3 மாதங்கள் முதல் 3 ஆண்டுகள் வரை உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு அவசியம் பாரெக்ஸ்

| குழந்தையின் வயது | பாரெக்ஸ் அளவு |
|---|---|
| 3 – 6 மாதங்கள் | 1 – 2 தேக்கரண்டியளவு – தினம் இருமுறை |
| 6 – 9 மாதங்கள் | 3 – 4 தேக்கரண்டியளவு – தினம் மூன்று முறை |
| 9 மாதங்கள் – 3 ஆண்டுகள் | 4 – 6 தேக்கரண்டியளவு – தினம் நான்கு முறை |



உங்கள் பாரெக்ஸ் புத்தகத்தை இலவசமாகப் பெற, 25 பைசா தபால் தலை இணைத்து எழுதுக: டிபார்ட்மெண்ட் k-1, த.பெ. 16568, பம்பாய் 400 025 (எந்த மொழியில் வேண்டுமென்று தெரிவிக்கவும்).

**பாரெக்ஸ்®**
க்ளாக்ஸோ தயாரிப்பு




சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திட உணவு

CMGF-41-104 TM

# கல்கி



ஆனந்த பங்குனி, 16
மார்ச் 30, 1975


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே! சம்பவங்களும் கற்பனையே.

## அடுத்த இதழில்:




வாசவன் எழுதும் சிறுகதை:




## புலிராஜா



# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!




பியர்ஸ்—அசல் கிளிசரின் சோப்

**பியர்ஸ் சருமக் களை...**
**கன்னிப் பருவக் களை**



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயைக் கும்பிடடி பாப்பா — பாரதியார்

# முதல்வருக்கு ஒரு கடிதம்

மாண்புமிகு டாக்டர் கலைஞர் முதல்வர் கருணாநிதி அவர்களுக்கு,

சமீப காலமாகத் தாங்கள் ரொம்ப ரொம்பக் கோபப்படுகிறீர்கள். எதையுமே ஒரு தனிப்பட்ட கௌரவப் பிரச்னையாக்கிக் கொண்டு தாங்களும் சிரமப்பட்டு மற்றவர்களையும் சிரமப்படுத்துகிறீர்கள். இதைச் சுட்டிக் காட்ட வேண்டியது நமது கடமையாகிறது.

வேலூரில் உங்கள் முயற்சி ஏதும் பலிக்கவில்லை. உங்கள் யோசனைகளுக்குப் பலத்த எதிர்ப்பும் மருத்துவமனை நிர்வாகத்தின் நிலைக்குப் பெருத்த ஆதரவும் இருப்பதைப் பார்த்துச் சாமர்த்தியமாகப் பின்வாங்கிக் கொண்டீர்கள். ஆனாலும் ''மண் ஒட்டாத'' கதையாகத் தோல்வியை வெற்றியாக்கிக் கொள்ளச் சாணக்கியம் செய்தீர்கள். வேலையிலிருந்து நீக்கப்பட்டவர்களுக்கு அரசாங்கத்திலேயே உத்தியோகம் தருவேன் என்றும் அவர்கள் இழக்கின்ற 'கிராட்சுவிடி' தொகையை முதல்வர் நிதியிலிருந்து ஈடு செய்வேன் என்றும் கூறியிருக்கிறீர்கள். இதனால் உங்கள் கௌரவம் காப்பாற்றப்பட்டதாக நீங்கள் கருதலாம். ஆனால் அதற்குத் தரப்படும் விலை என்ன? உங்களை வாயார மனமார வாழ்த்தும் டாக்டர் சந்தோஷம்கூட 'வேலையிலிருந்து நீக்கப்பட்டவர்கள் செய்த குற்றங்களைப் பற்றிப் படிக்கும்போது அதிர்ச்சி ஏற்படுகிறது' என்று ஒப்புக் கொண்டிருக்கிறார். இத்தகைய பெரிய குற்றங்களைப் புரிந்து வேலை நீக்கம் செய்யப்பட்டவர்களுக்கு அரசாங்கம் புகலிடம் தரும்; பணமும் கொடுக்கும் என்று ஏற்பட்டுவிட்டால் அது தொழிலாளர் சமூகத்தில் ஒரு பொறுப்பற்ற தன்மை வளர வசதி செய்ததாகாதா? இப்படி ஒரு முன்னோடியை நீங்கள் ஏற்படுத்திய பிறகு இதே போன்ற சலுகைகள் தங்களுக்கும் காண்பிக்கப்பட வேண்டும் என்று வேலைநீக்கம் செய்யப்பட்ட வேறு பலர் எண்ண மாட்டார்களா?

'ஹரிஜனங்கள், ஹரிஜனங்கள்' என்று திரும்பத் திரும்பச் சொல்லிச் சாதி வர்ணம் பூசினீர்கள். ஹரிஜனங்களுக்கு ஆதரவும் உதவியும் செய்வதை யார் வேண்டாம் என்பார்கள்? அவர்களுக்கு விசேஷச் சலுகைகள் அரசியல் சட்டப்படியே இருக்கிறது. ஆனால் யோக்கியப் பொறுப்புடன் நடந்து கொள்பவர்களுக்குத்தான் அந்தச் சலுகைகள். அதை நீங்கள் மறக்கலாமா? மேலும் வேலைநீக்கம் செய்யப்பட்டவர்களில் ஹரிஜனங்கள் மட்டுமல்ல, ஹரிஜனக் கிறிஸ்துவர்களும் உண்டு. மருத்துவமனையோ கிறிஸ்துவ மருத்துவக் கல்லூரி என்றே பெயர் பெற்றது. 'தவறு செய்தவர்களை மன்னிக்க வேண்டாமா? ஏசு சொன்னாரே' என்று வாசாலகமாகப் பேசுகிறீர்கள். தவறு செய்தவர்கள் மனம் திருந்தி வருந்தினால்தான் மன்னிக்கச் சொன்னார் ஏசு. குற்றம் புரிந்துவிட்டுப் பிடிவாதமும் செய்பவர்களையெல்லாம் மன்னிப்பது என்றால் நேர்மை, ஒழுக்கம் எல்லாம் தமிழ் நாட்டிலிருந்து விடைபெற்றுப் போய்விடும்.

தமிழகத்தின் பஞ்ச நிவாரணப் பணிக்கு மத்திய அரசு ஒதுக்கிய தொகை சரியான முறையில் செலவிடப்படுகிறதா என்று பார்த்துவிட்டுப் பிறகுதான் மேற்கொண்டு நிதி ஒதுக்க முடியும் என்று திரு சி. எஸ். கூறியதற்காகக் கோபித்துக்கொண்டு அதையும் கௌரவப் பிரச்னையாக்கி விட்டீர்கள்.

சி. எஸ். கூறியது அரசியல் சட்டப்படி தவறு என்றே கொள்வோம். அதை நீங்கள் அழுத்தமாகச் சுட்டிக் காட்டிவிட்டு, ''ஆனாலும் பஞ்ச நிவாரணப் பணியைப் பரிசோதிக்க வருபவர்களை நாங்கள் மனமார வரவேற்கிறோம்; தில்லுமுல்லுகள் ஏதுமில்லை என்பதை அவர்களுக்கு உணர்த்தக் காத்திருக்கிறோம்'' என்று கூறியிருந்தால் மக்கள் மதிப்பில் எவ்வளவோ உயர்ந்திருப்பீர்கள். அதை விட்டு விட்டு மத்திய அரசின் உதவியே வேண்டாம் என்று பிகக்காரம் பண்ணிக் கொண்டால் யாருக்கு நஷ்டம்? தமிழகத்துக்குத்தானே?

ஆளுனர் மேதகு ஷா பஞ்ச நிவாரணப் பணியில் உள்ள சில அதிருப்திகரமான நிலைகளை விவரித்திருக்கிறார். இதையும் உங்கள்


லெவி அதிகாரி
விவசாயி
புதிய பெருச்சாளி


மாநில சுயாட்சி...
கொடுத்தாக வேண்டும்...
பார்ப்போம் ஒரு கை!


வோட்டுப் பெட்டி
அரசியல் போகிற போக்கு.......

கூற்றையும் ஒப்பிட்டுப் பார்ப்பவர்கள் என்ன நினைப்பார்கள்? நடக்கிற ஊழலை மறைக்க முயலுகிறீர்கள் என்று முடிவு கட்ட வாய்ப்பளிக்கிறதல்லவா?

மத்திய அரசிடம் உதவி வேண்டாம் என்று கூறிவிட்டு பஸ்ஸுக்கு ஆயிரம், கடைக்கு நூறு என்று நிதி வசூலிக்க ஆரம்பிக்கிறீர்கள். அதிகாரிகளையும் இதற்கென முடுக்கி விட்டுவிட்டால் பொதுவில் சிறு வியாபாரிகளுக்கும் மக்களுக்கும் எத்தனை சிரமம்? யோசித்துப் பாருங்கள்.

நாட்டை ஆளும் நிலைமையில் உள்ளவர்கள் ஆத்திரமடையாமல் அமைதி காப்பது அவசியம். நன்கு சிந்தித்துச் சொந்த கௌரவத்தை விட்டுக் கொடுத்தாவது நாட்டு நலனைக் கவனிப்பது முக்கியம்.

# என்ன சேதி?

## மூலவரும் உற்சவரும்

மூலவரைத் தரிசிக்க நாம் பிரயாசை எடுத்துக் கொண்டு கோயில் வரை போக வேண்டும். ஆனால் உற்சவரோ நம்மைத் தேடி நம் வீட்டு வாசலுக்கே வந்து விடுகிறார். தீட்சிதரை மூலவருக்கு ஒப்பிடலாம் என்றால் தியாகையர் உற்சவமூர்த்தி.

முத்துசாமி தீட்சிதர் விழா தில்லி பம்பாய் முதல் சென்னை, திருவாரூர் வரை பல இடங்களில் சிறப்பாக நடந்து வருகிறது. சென்னை சங்கீத வித்வத் சபை ஏற்பாடு செய்திருந்த விழாவில் முன்னாள் நீதிபதி அனந்தநாராயணன் அழகாகப் பேசினார்.

அம்பாள் அமர்ந்திருக்கும் உயர் பீடத்தின் மேல் ஏறிச் சென்று அவள் பாத கமலங்களின் அருகேயே அமர்ந்து ஞானம் பெற்று அருமையான சாகித்தியங்களை இயற்றியவர் தீட்சிதர். அத்தனை உயர்ந்த சாகித்தியங்களை அனுபவிக்க நாமும் அந்த ஞான பீடத்தில் நாலு படிகளாவது ஏற வேண்டும் என்றார். ஆனால் தியாகையரோ நமக்கு எந்தச் சிரமமும் தராமல் நம்மைத் தேடி வந்து நம் இதயத்தை ஆக்கிரமித்துப் பக்தி வளர்க்கும் எளியவர் என்றார். இவ்விருவரும் கையாண்ட ராக சம்பிரதாய முறைகளிலேயே வேற்றுமைகள் இருந்ததைக் கட்டிக் காட்டினார்.

பேச்சுக்குப் பிறகு ஸ்ரீ செம்மங்குடி கச்சேரி. தீட்சிதரைத் தொடர்ந்து நாலு படி என்ன, நாற்பது படியே ஏறியவர் அவர். அன்றைய கச்சேரியில் அமர்க்களமாய் அபூர்வ கிருதிகள் பலவற்றைப் பாடி ரசிகர்களை ஆனந்தத்தில் ஆழ்த்தினார்.

காரைக்குடி மணியின் மிருதங்கமும் நாகராஜனின் கஞ்சிராவும் கச்சேரி களைகட்ட உதவியது என்றால் அமெரிக்காவிலிருந்து அண்மையில்தான் திரும்பியுள்ள டி. என். கிருஷ்ணனின் வயலின் வாசிப்புக்கு நிரம்பி வழிந்த அகாடமி அரங்கில் அசாத்திய வரவேற்பு.

## ஜே பி. விரும்பமாட்டார்

பாட்னா பல்கலைக் கழகத்தில் மாணவர்கள் கடினமான கேள்வித் தாள்களை ஆட்சேபித்துப் பரீட்சை கூடத்தை விட்டு வெளி நடப்பு செய்தார்கள்! கோரக்பூர் பல்கலைக் கழகத் துணைவேந்தரை அவரது ஆசனத்திலிருந்து மாணவர்கள் இறக்கிவிட்டு, மாணவர் தலைவரை அந்தப் பதவியில் அமர்த்தினார்கள்! பல்கலைக் கழகத்துக்கு ஜெயப்பிரகாஷ் நாராயணன் பெயரைச் சூட்டினார்கள்!

ஜே.பி. இதையெல்லாம் விரும்பமாட்டார் என்பது நமக்குத் தெரியும். ஆனால் இப்படியெல்லாம் நடக்கும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை என்றால் அது அவர் தவறு தான். இயக்கம், புரட்சி என்று ஆரம்பித்து அதில் மாணவர்களையும் ஈடுபடுத்தியபிறகு நிலைமை கட்டுமீறிப் போவதில் வியப்பில்லை.

எதிர்க்கட்சிகளை ஒருங்கிணைத்து ஆக்கபூர்வமான ஒருமுகச் சிந்தனைக்கு வழிவகுப்பதுடன் ஜெயப்பிரகாசர் நிற்பதே நல்லது. ஆளும் கட்சியும் இதற்கு அநுசரணையாக நடந்து கொள்ள வேண்டும். ஆட்சியிலுள்ளோர் எதிர்க் கட்சிகளை மதிக்கவும் அவர்கள் யோசனைக்குச் செவிசாய்க்கவும் பழக வேண்டும். எதிர்க்கட்சிகள் பாட்டுக்கு எதிர்க்கட்டும், ஆளும் கட்சி ஆளும் என்ற போக்கில் சென்றால் அது ஜனநாயகமாகாது. சிறுபான்மை வோட்டுப் பெற்றுப் பதவிக்கு வந்தவர்களின் எதேச்சாதிகாரப் போக்கு ஆகும். இதை அசைக்கப் புரட்சி, இயக்கம் என்ற கருவிகளைப் பயன்படுத்த வேண்டிய நிர்ப்பந்தம் அப்போது உருவாகிறது.

## காலை வாரிய நண்பன்

இந்திய அரசு இன்று ருஷ்யாவைத்தான் மிகச் சிறந்த நேசநாடாகக் கருதுகிறது. எத்தகைய நண்பன் என்பது இன்று நன்றாக நிரூபணமாகிவிட்டது. ருஷ்ய ஒற்றர்கள் நமது ராணுவ அதிகாரிகள் சிலரை விலைக்கு வாங்கியிருக்கிறார்கள். அவர்கள் மூலம் ராணுவ ரகசியங்களை அறிந்து மாஸ்கோவுக்கு அனுப்பியிருக்கிறார்கள். இந்த மோசடி அம்பலமான கையோடு இந்திரா அரசு மூடி மறைக்க முயன்ற இன்னோர் அதிர்ச்சி தரும் விஷயமும் வெளியாகி இருக்கிறது.

ருஷ்யாவும் இந்தியாவும் வர்த்தக உறவை வளர்த்துக் கொண்டுள்ளதைப் பிரமாதப் படுத்தினார்கள் இரு சாராரும். அப்படி வர்த்தகம் வளர்ந்ததில் சுமார் நானூறு கோடி ரூபாய் ருஷ்யாவுக்கு இந்தியா தர வேண்டியது பாக்கி நிற்கிறது. இத்தனைப் பொருள்கள் ஏற்றுமதி செய்து கணக்குத் தீர்க்க வேண்டும். இந்நிலையில் ருஷ்ய அரசு, 'ரூபாயின் மதிப்பு குறைந்துவிட்டது; எனவே நானூறு கோடி அல்ல, அதற்கு அதிகமாகவே நீங்கள் தர வேண்டும், பண்டங்களை ஏற்றுமதி

செய்ய வேண்டும்' என்கிறது. இதன் விளைவுகளை எண்ணி மத்திய அரசின் நிதி இலாக்கா பிரமித்துப் போய்க் கையைப் பிசைந்து கொண்டு நிற்கிறது!

இத்துடன், பி.எல். 480 கணக்கில் கோடிக் கணக்கான ரூபாய்களைத் திரும்பத் தரவே வேண்டாம் என்று கூறிவிட்ட அமெரிக்காவின் பெருந்தன்மையை ஒப்புநோக்காமல் இருக்க முடிகிறதா? ஆனால் அந்த அமெரிக்காவைத்தான் நமது அரசு விரோதித்துக் கொள்ளத் தயங்கியதேயில்லை!

## இரட்டைக் கொலைகள்!

எழும்பூர் பெண்கள் மருத்துவ மனையில் கருச் சிதைவு செய்து கொண்ட இருபத்திரண்டு தாய்மார்கள் மரணமடைந்தனர் என்ற செய்தி அதிர்ச்சி அளிப்பது. அமைச்சர் இது குறித்து விசாரணை நடத்துவதாகச் சட்ட சபையில் வாக்களித்துள்ளார்.

கருச் சிதைவு செய்து கொள்வதற்குச் சட்ட பூர்வமான சம்மதம் தருவது எவ்வளவு பெரிய தவறு என்பதை இப்போதும்கூட அரசு புரிந்து கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. ஓர் உயிரை அழிப்பது பாவம் என்றால் அந்த முயற்சியில் மற்றோர் உயிரையும் பலியிடுவது எத்தனை கொடுமை! இதனை உயிர் காக்கும் புனிதமான மருத்துவத் தொழிலுடன் சம்பந்தப்படுத்துவது எத்தனை அநீதி! அரசும் சட்டமும் அனுமதித்தாலும் இதனை மருத்துவ சமூகமும் சங்கங்களும் வன்மையாக எதிர்க்க வேண்டாமா?

## அரை வைத்தியர்கள்!

அரைகுறை வைத்தியப் படிப்பு முடித்தவர்களைக் கிராமப்புறங்களில் வைத்தியர் பணிக்கு அனுப்பி வைக்கலாம் என்ற மத்திய அரசின் யோசனையைத் தமிழக அரசு நிராகரித்துவிட்டது. நல்ல காரியம். ஆயிரம் பேரைக் கொன்றவன் அரை வைத்தியன் என்று விளையாட்டாகச் சொல்வதுண்டு. நன்கு தேர்ச்சி பெற்றவர்கள் நிலையே இப்படியென்றால் அரைகுறைப் படிப்புடன் வருகிறவர்கள் என்னவெல்லாம் தீமைகளைச் செய்துவிட முடியும் என்று எண்ணிப் பாருங்கள். கிராமப்புறங்களில் வைத்திய உதவிகளை அதிகரிக்க ஒரே உபாயம் நடமாடும் வைத்தியசாலைகளை அதிக அளவில் பயன்படுத்துவதே. காலஞ்சென்ற டாக்டர் பி. கே. துரைசாமி இதற்காக மிகுந்த பிரயாசைப் பட்டுத் திட்டங்களைத் தீட்டியிருந்தார். மாநில, மத்திய அரசுகள் அதனைத் தொடர்ந்து கவனித்து ஆவன செய்யட்டும்.

## மற்றொரு பரிசு!

தாம் எழுதிய நாவல்களுள் தமக்கே மிகவும் பிடித்ததென அமரர் கல்கி கருதியது அலை ஓசை. விடுதலை இயக்கத்தைப் பின்னணியாகக் கொண்டு அமைந்த அந்த அற்புத நாவலைத் தேசிய புத்தக நிறுவனம் இந்தியாவின் பல்வேறு பாஷைகளில் மொழி பெயர்த்து வெளியிடுகிறது. அதற்கு முதற்படியாக அலைஓசைச் சுருக்கத்தைத் தமிழிலிருந்து ஹிந்திக்கு மொழிபெயர்த்தார் நமது உதவி ஆசிரியர் திரு வீழிநாதன். இந்த மொழிபெயர்ப்புப் பணிக்காகக் கிடைத்த சன்மானம் தவிர இந்திய அரசு அவருக்கு விசேஷப் பரிசும் அளித்துக் கௌரவித்திருக்கிறது. அகில உலக இந்தி மகாநாட்டிலே அண்மையில் வீழிநாதன் பெற்ற பெருமையை அடுத்து இந்தப் புது கௌரவமும் கிட்டியுள்ளது. இந்தியைத் தாய்மொழியாகக் கொள்ளாதவர்கள் இந்திக்கு ஆற்றிய பணி என்ற வகையில் தமிழகத்தில் திரு வீழிநாதன் இந்த ஆண்டு அலை ஓசை மொழிபெயர்ப்புக்காகப் பரிசு பெறுகிறார். கல்கி நேயர்களின் வாழ்த்தினை அவருக்குத் தெரிவித்துக் கொள்வோம்.

ராஜாஜி சிந்தனை

### சிலந்திவலை ஈ!

ஒவ்வொரு தொழிலதிபரும் ஒவ்வொரு வர்த்தகரும் பண்டம் வாங்கும் ஒவ்வொருவரும் இன்று சிலந்தி வலையில் மாட்டிக்கொண்ட ஈயின் நிலையில் இருந்து தவிக்கிறார்கள். ஒட்டடை அடிக்க வேண்டும். இந்தியாவைச் சுதந்திர மனிதர்கள் அடங்கிய நாடாக்க வேண்டும்.

சுதந்திரமான போட்டா போட்டியுள்ள நிறுவனங்களை வளர்த்துத் தனி மனிதர்களின் ஆக்க சக்தியை விடுவிப்போம். மென்னியைப் பிடிக்கும் பர்மிட் - லைசென்ஸ் - கோட்டா முறையிலிருந்து சிறிதும் பெரிதுமான தொழில் வர்த்தக நிறுவனங்களை மீட்போம். இதைச் செய்தாலன்றித் திருப்திகரமான பொருளாதார வளர்ச்சி ஏற்படாது. வரிகளைக் கணிசமாகக் குறைத்தாலன்றி மூலதனம் பெருகாது. வரிகளைக் குறைத்தாலன்றிக் கறுப்புப் பண நடமாட்டம் குறையாது. பர்மிட் - லைசென்ஸ் உடைந்து சுதந்திரப் பொருளாதாரம் உருவானால் அணுவைப் பிளக்கும் போது அபரிமிதமான சக்தி விடுவிக்கப்படுவது போல் அத்தனை வேகத்துடன் உற்பத்தி ஏராளமாகப் பெருகும்.

சுயராஜ்யா, ஜூன் 12, 1965



# முருகப் பெருமான் ③



ஜகத்குரு
ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசாரிய ஸ்வாமிகள்

**ஸ்ரீ** சங்கர பகவத்பாதர்களுக்கும் அமரசிம்மனுக்கும் வாதப் போர் ஆரம்பித்தது.

அமரசிம்மன் ஒரு திரையைக் கட்டிக் கொண்டு அதற்கு உள்ளே இருக்கிறான். ஆசாரியாள் வெளியே இருந்து கேள்விகள் கேட்கத் தொடங்கினார்.

அமரசிம்மன் பளிச்சுப் பளிச்சென்று பதில் சொன்னான். அவன் என்னதான் மகா புத்திமானாக இருந்தாலும் கூட இத்தனை சாமர்த்தியமாக எப்படிப் பிரதிவசனம் கொடுக்கிறான் என்பது ஆசாரியாளுக்கு ஆச்சரியமாக இருந்தது. க்ஷண காலம் யோசித்தார். உடனே பரமேசுவர அவதாரமும், ஸர்வக்ஞருமான அவருக்கு ரகசியம் புரிந்து விட்டது.

அவருடைய கேள்விகளுக்குப் பதில் சொன்னது அமரசிம்மனே இல்லை! சாட்சாத் சரஸ்வதி தேவியே அவன் மாதிரி பேசியிருக்கிறாள் என்று தெரிந்தது. இவன் அவளை ரொம்ப நாளாக உபாசித்திருக்கிறான். நியாயமாகப் பார்த்தால் அவன் அப்படிச் செய்திருக்கவே கூடாது. ஏனென்றால் இவனுடைய ஜைன மதம் ஒரு கடவுளைப் பற்றியே சொல்லவில்லை; அதைப் பல ரூபத்தில், சரஸ்வதி மாதிரி பல தெய்வ வடிவங்களில் ஆராதிப்பதை ஜைன மதம் ஒப்புக் கொள்ளாது. அப்படியிருந்தும் இவன் ஜைன மதத்துக்கு ஆதரவாகப் புஸ்தகம் எழுதுவதற்கே சரஸ்வதியின் அநுக்கிரகம் வேண்டுமென்று கருதி அவளை உபாஸனை பண்ணியிருக்கிறான்! உள்ளொன்று வைத்துப் புறமொன்றாக இருந்திருக்கிறான்.

இப்பொழுதுகூட நாஸ்திகர்கள் என்று தங்களைச் சொல்லிக் கொள்கிறவர்களில் ரொம்பப் பேர் வியாதி வக்கை வந்து ரொம்பவும் கஷ்டம் ஏற்பட்டால் வேங்கடரமண ஸ்வாமிக்கு வேண்டிக் கொள்கிறார்கள்; மாரியம்மனுக்குப் பிரார்த்தனை செலுத்துகிறார்கள். கேட்டால், "வீட்டில் இப்படி அபிப்பிராயம்; சம்ஸாரத்துக்கு இதிலே நம்பிக்கை; அவர்களுக்காக விட்டுக் கொடுத்தேன்" என்று ஜம்பமாகச் சொல்லிக் கொள்வார்கள்.

இந்த ரீதியில்தான் ரொம்ப காலம் முந்தியே வைதிக மதத்தைக் கண்டனம் பண்ணும் கிரந்தங்களை எழுதிய அமரசிம்மன், அவை நன்றாக அமைய வேண்டும் என்று வைதிக மதத்தின் வாக்குத் தேவதையையே உபாசனை செய்தான். ஒருவன் எந்தக் காரியத்தைச் செய்தாலும், அது நல்லதாகத்தான் இருக்கட்டும், கெட்டதாகத்தான் இருக்கட்டும், அதிலே பூரண சிரத்தையுடன் இறங்கி விட்டான் என்றால் அதற்குண்டான ஒரு பலனை பகவான் தந்துதான் கொடுக்கிறான். அப்படியே இவனுடைய உபாசனையின் சிரத்தையை மதித்து இவனுக்கும் சரஸ்வதி அநுக்கிரகம் செய்துவிட்டாள்.

இதை ஆசார்யாளும் நுனி மனசைச் செலுத்தியவுடனே கண்டுபிடித்துவிட்டார். உடனே அவர், "அம்மா! உன் காரியம் தானா இது? நீ இப்படிச் செய்யலாமா? உன்னையும் மற்ற அத்தனை தெய்வங்களையும் ஆராதிக்கிற பழக்கத்தையே தொலைத்துவிட வேண்டும் என்று கிரந்தம் செய்கிறவனுக்கே நீ இப்படி அநுக்கிரகம் செய்யலாமா? அவனுடைய உபாசனா பலத்துக்காகச் செய்தாய் என்றாலும், அவன் இத்தனை புஸ்தகங்கள் எழுதியுமா அது தீரவில்லை? அதோடு, இத்தனை நேரம் என்னோடு தாக்குப் பிடித்து வாக்குவாதம் செய்ததிலும் எத்தனையோ அநுக்கிரகத்தைச் செய்துவிட்டாயே! அவனுக்குச் செய்ய வேண்டியதற்கு அதிகமாகச் செய்வது நியாயமா?" என்று சரஸ்வதியைக் கேட்டார்.

அவருடைய கணக்குச் சரியாகத்தான் இருந்தது. அமரசிம்மனுடைய உபாசனைக்குப் பிரதிபலன் தந்து தீர்த்தாயிற்று என்று சரஸ்வதி தெரிந்து கொண்டாள்.

உடனே அமரசிம்மன் அவளை ஆவாஹனம் பண்ணி வைத்திருந்த கடத்திலிருந்து அந்தர்தானமாகி விட்டாள். திரை அறுந்து விழுந்தது!

அப்புறம் அமரசிம்மனால் ஆச்சாரியாளுக்கு ஈடு கொடுக்க முடியவில்லை. தோல்வியை ஒப்புக்கொண்டான்.

சரஸ் — அதாவது நீர்நிலையில் இருக்கிறவள் சரஸ்வதி. அறிவுதான் அந்த நீர்நிலை. அது கொஞ்சம்கூடக் கலங்காமல் தெளிந்திருந்தால்தான் அதற்குள் அவள் இருக்க முடியும். ஆனால் ஆசாரியாள் அவதரித்த காலத்தில் எப்படி இருந்தது? ஏகப்பட்ட மதங்கள்— எழுபத்திரண்டு என்று சொல்வார்கள் — விதண்டாவாதங்களைச் சொல்லிக் கொண்டு அறிவையே கலக்கின; சரஸானது ஒரே சேற்றுக் குட்டை மாதிரி ஆகிவிட்டது. அப்போது அத்வைத உபதேசத்தால் ஆசார்யாள்தான் அந்தச் சேற்றையெல்லாம் அடியோடு வாரி அப்புறம் போட்டு, சரஸைத் தெளிய வைத்து, சரஸ்வதியை நிஜமான சரஸ்வதியாக்கினார். இப்படி ஒரு சுலோகம் உண்டு. ('வக்த்ராரம்' என்று ஆரம்பிக்கும்.)

சரஸ்வதியை சரஸ்வதியாக்குவதற்கே இப்போது அவர் சரஸ்வதியை அப்புறப்படுத்தும்படி ஆயிற்று. பிறகு அவர், சரஸ்வதியின் அநுக்கிரகத்தைப் பெற்ற ஜைனனுக்குத் தாமும் ஓர் அநுக்கிரகத்தைச் செய்தார். அதைச் சொன்னால் அதுவே 'அமரகோச'த்தின் கதையும் ஆகும். (தொடரும்)

**மா**னேஜர் அறையிலிருந்து வெளியே வந்த அருணாவின் முகத்தில் ஈயாடவில்லை. அவள் முகம் வெளிறிப் போய்க் காணப்பட்டது. கண்களில் பொங்கி நின்ற நீர் எந்த நேரத்திலும் கன்னங்களில் வழிந்து ஓடக் கூடிய ஒரு நிலை.

டைப்பிஸ்ட் சுமதி இதைக் கவனித்தாள். தன் இருக்கையை விட்டு எழுந்து வந்து அருணாவை ஆதரவுடன் அழைத்துத் தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டாள். ஆபீஸ் பையனை இரண்டு கப் காப்பி வாங்கி வரும்படி பணித்தாள்.

''என்ன அருணா? மானேஜர் ரொம்பக் கோபித்துக் கொண்டாரா?''

அருணாவுக்குத் துக்கம் பொத்துக்கொண்டு வந்தது. ''ஆமாம். அடுத்த வாரம் என் விற்பனை சரியில்லையென்றால் வேறு ஆள் போடப் போவதாகத் தீர்மானமாகக் கூறி விட்டார்!'' என்றாள் அருணா விம்மியபடி.

''கண்ணைத் துடைத்துக்கொள். இப்படி மனத்தை விட்டு விட்டால் எப்படி? ஆபீஸ் என்றால் இப்படித்தான். ஒரு நாள் கோபிப் பார்கள் இன்னொரு நாள் தட்டிக் கொடுப் பார்கள்!'' என்று சமாதானம் சொன்னாள் சுமதி.

''இல்லை. அப்படிச் சாதாரண மாக எடுத்துக்கொள்ள முடிய வில்லை. நானும் கொஞ்சமும் அய ராமல் சுற்றிப் பார்த்துவிட்டேன். யாரும் ஆர்டர் தரமாட்டேன் என்கிறார்கள். 'சாம்பிள்' கொடுத் தால் கையை நீட்டி வாங்கிக் கொள்கிறார்கள். ஆர்டர் கேட் டால், அவர்களிடம் தங்கிக் கிடக் கும் பழைய 'ஸ்டாக்'கைக் காட்டு கிறார்கள்!'' என்றாள் அருணா பரி தாபமாக.

அருணாவின் கம்பெனி சோப், பவுடர் முதலிய அழகு சாதனங் களைத் தயார் செய்து வந்தது. அருணா அதில் ஒரு விற்பனைப் பிரதிநிதி. சுமதி ஆபீஸ் டைப் பிஸ்ட். அருணாவுக்குத் திருமணம் ஆகவில்லை. அவளை நம்பி ஒரு குடும்பமே இருந்தது. சுமதியோ, திருமணம் நடந்தும்கூடத் தங்கள் வசதிகளைப் பெருக்கிக் கொள்ள வேலை பார்க்கிறாள். அவள் கண வனுக்குப் பாங்கில் உத்தியோகம்.

'' இருக்கும் நிலைமையை மானேஜரிடம் விளக்கிச் சொல்ல வில்லையா?'' என்று கேட்டாள் சுமதி.

''சொன்னேன். இதெல்லாம் என்ன சப்பைக் கட்டு எனக் கோபிக்கிறார். எப்படி யாவது சரக்கைத் தலையில் கட்டுவதில் தான் சாமர்த்தியம் இருக்கிறதாம். நொண்டிச் சமாதானமும், சால்ஜாப்பும் கேட் கத்தான் சம்பளம் கொடுத்து வைத்திருக் கிறதா என்று கேட்கிறார்'' என அருணா வருத்தத்துடன் கூறினாள்.

''பரவாயில்லை. அடுத்த வாரம் உனக்கு நிறைய ஆர்டர் கிடைக்கும். என் ஜோஸ்யம் பலிக்கிறதா, இல்லையா பாரேன்!'' என உற் சாகப்படுத்தினாள் சுமதி.

''அடுத்த வாரம்கூட வேண்டாம். நாளைக்கே ஒரு 'பார்ட்டி' பன்னிரண்டு மணிக்கு வரச் சொல்லி யிருக்கிறார்கள். அநாதை ஆசிரமம் ஒன்று நடத்துகிறார்களாம். சோப், பவுடர் எல்லாம் அதிக அளவில் தேவையாம். ஆசிரமத்தின் நிர்வாகியைக் கலந்து கொண்டு சொல்வதாகச் சொல்லியிருக் கிறார்கள். நல்லபடியாக முடியவேண்டும்.''

''போகிறது. அந்த அம்மாவுக்காவது உன் மேல் இரக்கம் பிறந்ததே !''



அருணா சிரித்தாள். '' அம் மாவா?...இல்லை. இதுவும் ஐயா தான். பல்லாவரம் சாம்பாஜி காலனி, மூன்றாவது தெரு, இரண் டாவது வீடு. பகல் பன்னிரண்டு மணிக்கு ஒரு 'அப்பாயின்ட் மென்ட்'. 'பார்ட்டி' ஒரு மணிக்கு பெங்களூர் போகிறார்.''

சுமதியின் நெற்றி சுருங்கியது. ''நன்றாக விசாரித்தாயா? நல்ல இடம்தானா?''

தான் இருக்கும். நல்ல உயரம். செந்த நிறம். தொளதொளவென்று ஒரு சட்டையும் லுங்கியும் அணிந்திருந்தான்.

''வாருங்கள், வாருங்கள். உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்'' என்று சிரித்தபடி வரவேற்றான்.

அருணா தயக்கத்துடன் உள்ளே நுழைந்தாள். ''அப்படி உட்காருங்கள்!'' என்று ஒரு சோபாவைக் காட்டினான் அவன். மின் விசிறியைச் சுழலவிட்டான்.

''என்ன புழுக்கம், என்ன புழுக்கம்! 'ஷவர்' அடியில் நின்று கொண்டே யிருக்கலாம்போல் இருக்கிறது!'' எனக் கூறியவன் தன் சட்டையின் மேல் பொத்தான்கள் இரண்டைக் கழற்றித் தன் வாயால் ஊதிக் கொண்டான்.

''நான் வந்த விஷயம்...'' என்று ஆரம்பித்தாள் அருணா.

''இருங்கள்... 'பாஸ்' சரி என்று சொல்லி விட்டார். ஸ்டோர்கீப்பரிடமிருந்து ஒரு 'கால்' எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். நீங்கள் உட்காருகிறீர்களா? பத்திரிகைகள் பாருங்களேன்!'' எனச் சில பத்திரிகைகளை அவள் பக்கம் நகர்த்தினான்.

அவன் போட்ட பத்திரிகைகளின் அட்டைகள் ஒரு மாதிரியாக இருந்தன. தனிமையில்கூடப் பெண்கள் பார்க்கத் தயங்கும் பத்திரிகை அது.

வாயில் கேட் கதவை இழுத்துப் பூட்டினான் அந்த இளைஞன். ''ஆடுமாடுகள் வளர்ப்பவர்கள் அவைகளைக் கட்டிப் போடுவது இடையாது. இருபதும் முப்பதும் கொடுத்து வாங்கிய செடிகளை ஐந்து நிமிஷங்களில் காலி பண்ணி விடுகின்றன!''




# நண்பகலில் ஒரு சந்திப்பு!

'அன்னம்'

''எந்த இடமானால் என்ன? நமக்கு வேண்டியது பிஸினஸ். ஆளைப் பார்த்தால் நல்லவராகத்தான் தெரிகிறது. என் தலைவிதி. என் வயிற்றுப் பிழைப்பு. நாயாக அலைய வேண்டியிருக்கிறது'' என்று அருணா மெதுவாக எழுந்தாள்.

அவள் போன பக்கமே மௌனமாகச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டு அமர்ந்திருந்தாள் சுமதி.

மறுநாள் பகல் பன்னிரண்டு மணி.

சாம்பாஜி நகர் காலனியில் மூன்றும் வீதி இரண்டாம் நம்பர் வீடு. இரண்டு பக்கங்களிலும் வீடு இடையாது. காலி மனைகள் தான்.

'காலிங் பெல்'லை அழுத்தியதும் கதவைத் திறந்தான் வாலிபன். வயது முப்பதுக்குள் என்று தன் செய்கைக்குச் சமாதானம் சொன்னான் அவன்.

''ஆமாம்... ஆமாம்...'' என்று ஒப்புக் கொண்ட அருணா தன் நெற்றியில் துளித்த வியர்வையை ஒற்றிக்கொண்டாள்.

''வீட்டைச் சுற்றிப் பார்க்கிறீர்களா? கட்டி முடித்து இரண்டு மாதங்கள்தான் ஆகின்றன. மொத்தம் ஐம்பத்திரண்டு ரூபாய் ஆயிற்று.''

''பரவாயில்லை...'' என்று தட்டிக் கழிக்கப் பார்த்தாள் அருணா.

''நோ! நோ! வந்து பாருங்களேன். ஒரு பெண்ணின் அபிப்பிராயம் எப்படி என்று

தான் நான் தெரிந்து கொள்கிறேனே!... ப்ளீஸ் கம் இன்...'' என அழைத்தான்.

வீட்டைச் சுற்றிப் பார்த்தான் அருணா. அந்த வீட்டைத் தினப்படி யாரும் உபயோகித்ததாகத் தெரியவில்லை. அடுப்படியில் சமைத்த சுவடே காணோம்.

''மாடியில் இரண்டு அறை போட்டிருக்கிறேன். காற்று பிய்த்துக் கொண்டு போகும். வந்து பாருங்களேன்!'' என்று அழைத்தான் அவன்.

''பெரிய தொணதொணப்புப் பேர்வழி!'' என மனத்தில் சபித்தபடி அருணா ஏறினாள். அவன் சொன்னபடி ஆடாவிட்டால் ஆர்டர் கிடைக்காதே. பொல்லாத மானேஜர் சீட்டைக் கிழித்தாலும் கிழித்து விடுவாரே!

மாடி அறை அழகாக இருந்தது. பெரிதாக இரட்டைக் கட்டில். டன்லப் பில்லோ போடப்பட்டு அழகாக இருந்தது.

'''அட்டாச்ட்'பாத்ரூம். ஷவர்கூட உண்டு. போய்ப் பாருங்கள்!'' என வற்புறுத்தினான் அவன்.

அவள் கதவைத் திறந்து உள்ளே போய்ப் பார்த்தாள். அவள் திரும்பும்போது படுக்கை அறை உள்பக்கம் தாளிடப்பட்டிருந்தது... அந்த யுவன் தன் சட்டையின் இதர பொத்தான்களை நிதானமாகக் கழற்றிக் கொண்டிருந்தான். அவன் பார்வை அவள் உடலைத் துளைத்தது. அருணா நடுங்கினாள்.

''வாட் ஈஸ் திஸ் நான்சென்ஸ்?'' எனக் கோபமாக அவள் ஆரம்பித்தாள்.

அவன் வழியை விடவில்லை. இரையைக் கவ்வப் பதுங்கும் பூனையைப் போல் அவளையே குறி வைத்து மெதுவாக நகர்ந்தான். அருணா துடித்தாள். என்ன செய்வது என்று அறியாது தவித்தாள்.

கீழே டெலிபோன் மணி அலறியது. அந்த வாலிபனுக்கு ஆத்திரம் பீறிட்டது. அறைக் கதவைத் திறந்து கொண்டு அவசரம் அவசரமாக இறங்கினான். அவன் டெலிபோனை எடுப்பதற்குள் அவனைத் தாண்டி வாசல் வராந்தாவில் போய் நின்றாள் அருணா.

''யார் பேசுவது? மிஸ்டர் சுரேஷ் இருக்கிறாரா?'' — டெலிபோனில் பேசியது ஒரு பெண் குரல்.

''நான் ஜெனரல் ஆஸ்பத்திரியிலிருந்து நர்ஸ் பேசறேன்... உங்கள் தங்கை பஸ் விபத்தில் மாட்டிக் கொண்டு ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டு இருக்கிறார்கள். நிலைமை மோசம். ஆக்ஸிஜன் கொடுத்துக்கொண்டு இருக்கிறோம். உங்கள் மைத்துனர் உங்கள் டெலிபோன் நம்பரைக் கொடுத்தார். உடனே புறப்பட்டு வரச் சொன்னார்.... 'காஷுவாலிடி வார்டு' நம்பர் எட்டு...ஐந்து நிமிஷங்கள் கூடத் தாமதம் செய்யாதீர்கள்... ரொம்ப அவசரம்.''

பேச்சைக் கேட்ட அவன் முகத்தில் கலவரம் பரவியது. கைகால்கள் பதறின. அவன் பார்வை நடுங்கியபடி நின்ற அருணாவின் மேல் விழுந்தது.

''மேடம்! என்னை மன்னித்து விடுங்கள். உங்களை ஏமாற்றித் தப்பான எண்ணத்துடன் இங்கே அழைத்து விட்டேன். 'உனக்குக் கூடப் பிறந்த தங்கை இல்லையா!' எனக் கேட்பது போல் ஆண்டவன் என் அருமைத் தங்கையையே என்னிடமிருந்து பறித்து விடுவார் போலிருக்கிறது. அவளுக்காக நீங்கள் ஆண்டவனிடம் வேண்டிக்கொள்ளுங்கள். என் தவற்றை மறந்து பிரார்த்தியுங்கள்!'' எனக் கெஞ்சினான்.

வாசல் 'கேட்'டை அவன் திறந்ததும் வெளியே வந்தாள் அருணா. 'பாவம், தன் தங்கை மேல் இப்படிப்பட்ட பாசம் வைத்திருப்பவனுக்கு இன்னொரு பெண்ணிடம் எப்படித்தான் முறை தவறி நடக்கத் தோன்றுகிறதோ?' எனப் பரிதாபப்பட்டாள்.

ஜெனரல் ஆஸ்பத்திரியில் 'காஷுவாலிடி வார்'டில் தேடித் தேடி அலைந்தான் சுரேஷ். அவன் தங்கையைக் காணோம். அவன் வருவதற்குள் அவள் கதை முடிந்து விட்டதா? அதைக்கூட விசாரித்துப் பார்த்தான். அன்று காலை விடிந்தது முதல் எந்த ஜீவனும் மரிக்கவில்லை. அவன், தன் தங்கையின் வீட்டுக்குப் போனான்.

''எங்கே அண்ணா இந்த வெய்யிலில் அலைந்துவிட்டு வருகிறாய்?'' — வரவேற்றவள் அவன் தங்கையேதான்.

''நீ....நீ....'' என்று குழறினான் சுரேஷ்.

''நான்தான். நானேதான். இன்னும் செத்துப் போகவில்லை. ஜெனரல் ஆஸ்பத்திரியை நன்றாகச் சுற்றினாயா?''

''அப்படியானால் டெலிபோனில் பேசியது?''

''நானேதான். என் குரலைக்கூட உன்னால் அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லையே...''

''நல்ல விளையாட்டுப் போ... நான் எப்படித் தவித்துப் போய்....''

அவன் குரல் மாறியது.

''ஏன் அண்ணா! இந்த இரண்டு மணி நேரத் தவிப்பையே உன்னால் தாங்க முடியவில்லையே. பன்னிரண்டு மணிக்கு நீ போட்ட திட்டம் மட்டும் நடந்திருந்தால் அந்தப் பெண் தன் வாழ்நாள் முழுவதும் தவிப்பாளே அது என்ன நியாயம்?''

''சுமதி.... உனக்கு....''

''எல்லாம் தெரியும். அவள் என் கம்பெனியில்தான் வேலை பார்க்கிறாள். உன் விலாசத்தை அவள் என்னிடம் சொன்னதும் எனக்குள் பொறி தட்டியது. அண்ணியும் ஊரில் இல்லை. நீ ஏதோ விஷமத்துக்குத் துணிந்து விட்டாய் என்பது மட்டும் எனக்குப் புரிந்தது. பன்னிரண்டு மணிக்கு முன்பே உன்னை வீட்டிலிருந்து கிளப்பப் பார்த்தேன். போன் கிடைக்கவில்லை.''

''அந்தப் பெண்...''

''வரும் வழியில் பஸ் ஸ்டாண்டில் பார்த்தேன். எல்லாக் கண்ணறாவியையும் என்னிடம் சொன்னாள்.''

''நான் யார் என்று....?''

''சொல்வேனா அண்ணா? எனக்கும் கௌரவம் இருக்கே? நீ என் கூடப் பிறந்த அண்ணன் ஆயிற்றே... காட்டிக் கொடுப்பேனா?'' என விரக்தியுடன் சொன்னாள் சுமதி.

''போதும் சுமதி... என்னைக் கொல்லாதே. நான் திருந்தி விட்டேன்!'' எனக் கதறினான் சுரேஷ்.

ராலிஃபேன் கொண்டுள்ள வலுவான, நவீன அடிப்பாகம். குழந்தைகளுக்குப் பாதுகாப்பளிக்க சிறப்பான முறையில் கவர்ச்சி-யான வலையமைப்பு. ஆண்டுக் கணக்கில் தொல்லையற்று இயங்கும் ராலிஃபேன் மோட்டார். அதிநுணுக்கமாகச் சமநிலைப்படுத்தப் பட்டுள்ள ராலிஃபேன் பிளேடுகள். ஸ்டோவ் எனாமல் முறையில் பூச்சிட்ட, எழிலும் கவர்ச்சியுமிக்க ராலிஃபேன் வண்ணங்கள். அத்துடன் எல்லா வகையிலும் சேவை செய்ய எப்போதும் காத்திருக்கும் ராலிஃபேன் பணியாளர்கள்.



15 ஆண்டுகளாக எல்லாவற்றையும்
விட மிக அதிகமாக விற்பனையாகும்
ஃபேனை இருப்பது எப்படி என்பதை
மிக நன்றாக புரிந்து வைத்துள்ளது

# ராலிஃபேன்

U-RTF-22 TAM





# மகளின் மகத்தான
# மங்கள மண நாளுக்கு
# முத்துக்குவியல்

உங்களது செல்வ மகளின் திருமணம் சிறப்பாக நடைபெறத் தேவையான பணம் சேமிக்கத் தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்கின் புதிய 'முத்துக்குவியல் டிபாசிட் திட்டம்' உதவுகிறது. இத்திட்டத்தினால் உங்கள் டிபாசிட்டுகளுக்கு அதிகபட்சம் 33.83% வரை வட்டி கிடைக்கிறது.

---

இன்றே இத்திட்டத்தில் ரூ. 13,000/- முதலீடு செய்யுங்கள். 21 ஆண்டுகள் முடிந்ததும் ரூ. 1,05,352-65 பெறுங்கள்

---

இந்த "முத்துக்குவியல் டிபாசிட் திட்டம்" மூலம் உங்கள் அருமை மகனின் உயர் கல்விக்கு வேண்டிய பணத்திற்கும் வகை செய்யலாம். அன்புப் பெற்றோர்களுக்கு "முத்துக்குவியல் டிபாசிட் திட்டம்" ஒரு அரிய வாய்ப்பு.




## தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்க் லிமிடெட்.

(ஷெட்யூல்ட் பேங்க் — ஸ்தாபிதம் 1921)
ரிஜிஸ்டர்ட் அலுவலகம்: 56, பீச் ரோடு,
தூத்துக்குடி 628 001

உங்கள் பணிபுரிய தமிழகத்தில் 35 கிளைகள்.

EP-TMB-103

## ஐம்பத்துமூன்றாம் அத்தியாயம்

## சந்தேகம்

அமாவாசை அன்று இரவு சிவகாமி தன்னுடைய மாளிகையில் தன்னந் தனியாக உட்கார்ந்திருந்தாள்.

அவளுக்குத் துணையாயிருந்த தோழி நோய்வாய்ப் பட்டிருந்த தன்னுடைய அன்னையைப் பார்த்துவிட்டு வரவேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்தபடியால், அதை வியாஜமாகக் கொண்டு அன்றிரவு அவளை வீட்டுக்கு அனுப்பிவிட்டாள்.

இப்போது தூண்டா விளக்கு ஒன்றே சிவகாமிக்குத் துணையாக எரிந்துகொண்டிருந்





தது. அவளுடைய உள்ளமோ பல்வேறு சிந்தனைகளில் ஆழ்ந்திருந்தது.

மாமல்லர் வரப்போகிறார் என்று எண்ணியபோதெல்லாம் அவளுடைய இருதயம் மேலெழும்பி வந்து தொண்டையை அடைத்துக் கொண்டது. ஆத்திரமும் ஆங்காரமும் ஒரு பக்கத்தில் பொங்கின. துக்கமும் ஆர்வமும் இன்னொரு புறத்தில் பெருகின.

மாமல்லரிடம் வைத்த காதலினால் அல்லவா இந்தத் துன்பங்களுக்கெல்லாம் ஆளானோம் என்ற எண்ணம் அடிக்கடி தோன்றிக் கொண்டிருந்தது. தனது நிலைமைக்குகந்த சிற்பியின் மகன் ஒருவனைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டிருந்தால், தான் இந்த அவகேட்டுக்கெல்லாம் ஆளாகி யிருக்க வேண்டியதில்லையல்லவா ?

காடு சூழ்ந்த தனி வீட்டில் வசித்த தன்னை மாமல்லர் ஏன் தேடி வந்து இப்படிப் பித்துப் பிடிக்கச் செய்ய வேண்டும் ? அப்படிச் செய்தவர் மண்டபப்பட்டுக் கிராமத்தில் ஏன் தன்னைத் தன்னந் தனியாக விட்டு விட்டுப் போக வேண்டும் ? மாமல்லர் மேல் உள்ள ஆசை காரணமாகத்தானே காஞ்சிக்கு அவள் வர நேர்ந்தது ! மறுபடியும் அவருடைய காதல் காரணமாகத் தானே கோட்டையிலிருந்து சுரங்கவழியாக வெளிவர நேர்ந்தது! ஆகா! தன்னுடைய துன்பங்களுக்கெல்லாம் காரணம் அவர்தான் !

இப்படியாக மாமல்லரிடம் ஒருபுறம் ஆத்திரத்தை வளர்த்துக் கொண்டு வந்தாள் என்றாலும், நேரம் ஆக ஆக, 'ஐயோ! அவர் வரவில்லையே?' என்ற ஏக்கமும் ஒருபுறம் அதிகமாகி வந்தது.

* * *

அர்த்தராத்திரியில் சிவகாமி ஆழ்ந்த சிந்தனையிலிருந்த போது திடீரென்று அவள் எதிரில் தாடியும் மீசையுமான முகத் தோற்றமுடைய இருவரைக் கண்டதும் திகில் அடைந்தவளாய் நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

ஆனாலும், அப்படி வந்தவர்களுடைய முகத் தோற்றம் பயங்கரத்தை விளைவிப்பதாக இல்லை.



எப்போதோ பார்த்த முகங்களாகவும் தோன்றின.

''யார் நீங்கள்? இந்த நள்ளிரவு வேளையில் எதற்காக இங்கே வந்தீர்கள்?'' என்று அதிகாரத்தொனியில் கேட்டாள்.

''சிவகாமி! என்னைத் தெரியவில்லையா?'' என்று மாமல்லரின் குரல் கேட்டதும், சிவகாமியின் முகத்தில் வியப்புடன் கூடிய புன்னகை மலர்ந்தது.

எத்தனையோ காலத்துக்குப் பிறகு சிவகாமியின் முகத்தில் தோன்றிய அந்தப் புன்னகை அவளுடைய முகத்துக்கு எல்லையற்ற வனப்பை அளித்தது.

ஆனால், அந்த முகமலர்ச்சியானது மாமல்லரின் உள்ளத்தில்மகிழ்ச்சியை உண்டாக்கவில்லை. 'ஆ! இவள் இவ்விடம் உற்சாகமாகத்தான் இருக்கிறாள்' என்ற எண்ணம் அவர் மனத்தில் உண்டாகி முகம் சுருங்கும்படி செய்தது.

''பிரபு! தாங்கள்தானா?'' என்று உணர்ச்சியினால் கம்பிய குரலில் கேட்டுக் கொண்டு சிவகாமி எழுந்தாள்.

''ஆமாம், நான்தான்! வாதாபிச் சக்கரவர்த்தியின் மாளிகையில் வைபோகமாக வாழும்போது பழைய மனிதர்களைப் பற்றி எப்படி ஞாபகம் இருக்கும்?'' என்று மாமல்லர் கடுமையான குரலில் கூறினார்.

அந்தக் கொடிய மொழிகளைக் கேட்ட சிவகாமி திக்பிரமை அடைந்த

வன்போல் மாமல்லரைப் பார்த்தது பார்த்தபடி நின்றாள். இவர் உண்மையில் மாமல்லர்தானா அல்லது வேஷதாரியா என்று அவளுக்கு ஐயம் தோன்றிவிட்டது.

இப்படி ஒருவரையொருவர் வெறித்துப் பார்த்துக் கொண்டு சும்மா நின்றதைக் கவனித்த தளபதி பரஞ்சோதி, அந்தச் சந்தர்ப்பத்தில் தாம் அங்கிருப்பது அநுசிதம் என்பதை உணர்ந்தார். உடனே மாமல்லரின் காதருகில் வந்து, '' பிரபு ! காலதாமதம் செய்யக் கூடாது ! அதிக நேரம் நமக்கில்லை!'' என்று சொல்லிவிட்டு, அப்பால் முன்கட்டுக்குச் சென்றார்.

பரஞ்சோதி மறைந்தபிறகு மாமல்லர், ''ஓகோ ! இன்னும் ஞாபகம் வரவில்லை போல் இருக்கிறது. போனால் போகட்டும். உன் தந்தை ஆயனரையாவது ஞாபகம் இருக்கிறதா, சிவகாமி ! ஆடல் பாடல் விநோதங்களில்



அவரையும் மறந்து விட்டாயா?'' என்றார்.

சிவகாமியின் புருவங்கள் நெரிந்தன. கோபத்தினால் சிவந்த கண்கள் அகல விரிந்தன; இதழ்கள் துடித்தன.

உள்ளத்தில் பொங்கி வந்த கோபத்தையெல்லாம் பெரு முயற்சியினால் அடக்கிக் கொண்டு, ''இளவரசே ! என் தந்தை சௌக்கியமாயிருக்கிறாரா ? எங்கே இருக்கிறார் ? எப்படி இருக்கிறார் ?'' என்று கேட்டாள்.

''ஆம்; ஆயனர் சௌக்கியமாயிருக்கிறார். கால்களில் ஒன்று முறிந்து ஏக புதல்வியை இழந்தவர் எவ்வளவு சௌக்கியமாக இருக்கலாமோ, அவ்வளவு சௌக்கியமா யிருக்கிறார். ' சிவகாமி எங்கே ? என் அருமை மகள் எங்கே?' என்று வந்தவர் போனவரையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கிறார். சிவகாமி! புறப்படு, போகலாம்.''

சிவகாமியின் கண்களில் நீர் ததும்பியது. ஆயினும், அவள் மாமல்லருடன் புறப்படுவதற்கு யத்தனம் செய்வதாகக் காணவில்லை.

'' சிவகாமி ! ஏன் இப்படி நிற்கிறாய் ? உன் தந்தையை உயிரோடு காண விரும்பினால் உடனே புறப்படு !'' என்றார் மாமல்லர்.

இன்னமும் சிவகாமி அசையாமல் சும்மா நின்றாள்.

''இது என்ன, சிவகாமி! காஞ்சிக்கு வர உனக்கு இஷ்டமில்லையா? ஆகா! அப்போதே சந்தேகித்தேன். அது உண்மையாயிற்று !'' என்று மறுபடியும் மாமல்லர் குத்தலாகச் சொன்னார்.

சிவகாமியின் மௌனம் அப்போது கலைந்தது. ''பிரபு! என்ன சந்தேகித்தீர்கள்?'' என்று கேட்டாள்.

''அதைப் பற்றி இப்போது என்ன? பிறகு சொல்கிறேன்.''

''என்ன சந்தேகித்தீர்கள்! சொல்லுங்கள், பிரபு!''

''இப்போதே சொல்ல வேண்டுமா?''

''அவசியம் சொல்ல வேண்டும்.''

'' வாதாபிச் சக்கரவர்த்தியின் மாளிகையில் சுகபோகத்துடன் வாழ்ந்தவளுக்கு என்னோடு புறப்பட்டு வர இஷ்டமா யிராது என்று சந்தேகித்தேன்.''

இதைக் கேட்டதும் சிவகாமி சிரித்தாள் ! நள்ளிரவு நேரத்தில் அந்தச் சிரிப்பின் ஒலி மாமல்லரின் காதுக்கு நாராசமாயிருந்தது. சிரிப்பை நிறுத்தியதும் சிவகாமி உறுதியான குரலில் கூறினாள்.

''ஆம், பல்லவகுமாரா ! உங்கள் சந்தேகம் உண்மைதான். எனக்கு இந்த மாளிகையின் சுகபோகத்தை விட்டு வர இஷ்டமில்லை. வாதாபி நகரைவிட்டு வரவும் மனம் இல்லை. நீங்கள் போகலாம் !''

இவ்விதம் சிவகாமி கூறியதும், மாமல்லர் கண்களில் தீப்பொறி பறக்க, ''ஆகா ! பெரியவர்கள் கூறி யிருப்பது எவ்வளவு உண்மை!'' என்றார்.

'' பெரியவர்கள் என்ன கூறியிருக்கிறார்கள் ?''

'' ஸ்திரீகள் சபலசித்தமுடையவர்கள் என்று சொல்லியிருக்கிறார்கள்.''

''அந்த உண்மையை இப்போது கண்டு கொண்டீர்கள் அல்லவா ? போய் வாருங்கள், பிரபு!''

''ஆகா ! உன்னைத் தேடி நூறு காத தூரம் வந்தேனே ? என்னைப் போன்ற புத்திசாலி யார் ?'' என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டார் மாமல்

அவள் மென்மையானவள்...
அவள் ஒரு புதிர்...
அவள் மிருதுவானவள்,
உறுதியானவள்...
தீப்போன்றவள் அவள்
பெண்மையே உருவானவள்

பட்டுப்போன்ற டால்க்... அன்பைப் போல மிருதுவானது. உங்கள் மேனியைத் தழுவி அரவணைப்பது. உங்களை மோகன லாகிரியில் ஆழ்த்தும் அருமையான புது நறுமணம் கொண்டது. ஹேலோவிற்கெனவே பிரத்யேகமாக உருவான அதன் நறுமணம் நீண்ட நேரம் உங்களைத் தழுவி உங்களைச் சுற்றி கமகமவென வீசிக் கொண்டிருக்கும். அதுவே உங்கள் வெய்ல் ஆ:ப் லவ். ஹேலோ மட்டுமே அளிப்பது.

# ஹேலோ

வெய்ல் ஆ:ப் லவ்
டால்க்




# தனிச் சலுகை

எகானமி சைஸ் டப்பா
ஒவ்வொன்றுக்கும்
ரூ.1.50
விலையில் தள்ளுபடி

புள்ளியிட்ட கோட்டினூடே வெட்டவும்.

பக்கத்திலுள்ள கூப்பனை வெட்டி எடுங்கள் அதில் உங்கள் பெயரையும், முகவரியையும் ஆங்கிலத்தில் பூர்த்தி செய்து, கூப்பனில் உள்ள முகவரிக்கு போஸ்ட் செய்யுங்கள். (தபாலில் அனுப்புங்கள்) உங்களுக்கு ஒரு விசேஷ தள்ளுபடிச் சீட்டு அனுப்பப்படும். அந்தச் சீட்டை உங்கள் டீலரிடம் கொடுங்கள். அவர் பட்டியல் விலையைவிட ரூ. 1.50 குறைந்த விலையில் ஹேலோ வெய்ல் ஆ:ப் லவ் டால்க் எகானமி சைஸ் டப்பா ஒன்று கொடுப்பார். இந்த விசேஷ சலுகை குறுகிய காலத்திற்கு மட்டுமே உண்டு. எனவே முந்துங்கள். இன்றே கூப்பனை தபாலில் சேருங்கள்.

COUPON

K

To
Halo Veil of Love Talc D. O.
C/o Colgate-Palmolive (India) Pvt. Ltd.
12-A Ritchie Street, Madras 600 002.

Dear Sirs,
I would like to have my Halo Veil of Love Talc discount voucher sent to :

Name ______________________

Address ______________________

______________________



HT.G.2 TM

வர். பிறகு, "சிவகாமி! நீ எனக்காக வர வேண்டாம். உன் தந்தைக்காகக் கிளம்பி வா! உன் தோழி கமலிக்காகப் புறப்பட்டு வா! உன்னைக் கட்டாயம் அழைத்து வருவதாக அவர்களிடம் சபதம் செய்துவிட்டு வந்தேன்!" என்றார் மாமல்லர்.

"நானும் ஒரு சபதம் செய்திருக்கிறேன், பிரபு!"

"நீயும் சபதம் செய்திருக்கிறாயா? என்ன சபதம்?"

"தங்களிடம் எதற்காகச் சொல்ல வேண்டும்?"

"சொல்லு, சிவகாமி! சீக்கிரம் சொல்!"

"சொன்னால் நீங்கள் நம்பப் போவதில்லை. சபல புத்தியுள்ள அபலைப் பெண்ணின் சபதந்தானே?"

"பாதகமில்லை, சொல்! நேரமாகிறது!"

"இந்த வாதாபி நகரம் தீப்பற்றி எரிந்து, இந்நகரின் வீடுகள் எல்லாம் சாம்பலாவதையும், வீதிகளிலெல்லாம் இரத்த வெள்ளம் ஓடுவதையும், நாற் சந்திகள் பிணக் காடாய்க் கிடப்பதையும் கண்ணாலே பார்த்த பிறகுதான் இந்நகரை விட்டுக் கிளம்புவேன் என்று சபதம் செய்திருக்கிறேன்!"

"என்ன கோரமான சபதம்? இப்படி ஒரு சபதத்தை எதற்காகச் செய்தாய், சிவகாமி!"

"பிரபு! இந்த நகருக்கு வரும் வழியில் நான் பார்த்த கோரக் காட்சிகளையெல்லாம் நீங்கள் பார்த்திருந்தால் எதற்காகச் சபதம் செய்தேன் என்று கேட்க மாட்டீர்கள். இந்த வாதாபி நகரின் நாற்சந்திகளிலே தமிழ் நாட்டு ஸ்திரீ, புருஷர்கள் கட்டப்பட்ட கரங்களுடனே கொண்டு வந்து நிறுத்தப்பட்டதையும், சாட்டையினால் அடிக்கப்பட்டதையும், அவர்களுக்கு முன்னால் பல்லவ தேசத்தின் நடன கலாராணி நாட்டியம் ஆடியதையும் தாங்கள் பார்த்திருந்தால், சபதம் ஏன் — எதற்காக — என்றெல்லாம் கேட்க மாட்டீர்கள்."

"சிவகாமி! அவையெல்லாம் நான் நேரில் பார்க்காவிட்டாலும் எனக்குத் தெரிந்ததுதான். இருந்தாலும், நீ இவ்வளவு கடுமையான சபதம் எடுத்துக் கொள்ளலாமா?"

"பிரபு! பல வருஷங்களுக்கு முன்னால், — பல யுகங்களுக்கு முன்னால்,— என்னை இளவரசர் ஒருவர் காதலிப்பதாகச் சொன்னார். என்னைத் தமது பட்டமகிஷியாக்கிக் கொள்வதாக வாக்குறுதி கூறினார். என்னை ஒருநாளும் மறப்பதில்லை என்று வேலின் மேல் ஆணையாக வாக்களித்தார். தாமரைக் குளக் கரையில் பூரண சந்திரனின் நிலவில், 'இந்த ஜன்மத்திலும் எந்த ஜன்மத்திலும் நீயே என் வாழ்க்கைத் துணைவி!' என்று சத்தியம் செய்தார். அவர் சுத்தவீரர் என்றும், சொன்ன சொல் தவறாதவர் என்றும் நம்பியிருந்தேன். அந்த நம்பிக்கை காரணமாகவே அத்தகைய சபதம் செய்தேன்!" என்று சிவகாமி கம்பீரமான குரலில் கூறி மாமல்லரை ஏறிட்டுப் பார்த்தாள். அந்தப் பார்வை கூரிய வேலைப் போல் மாமல்லருடைய நெஞ்சிலே பாய்ந்து அவரை நிலைகுலையச் செய்தது.

## ஐம்பத்து நாலாம் அத்தியாயம்

# விபரீதம்

**மா**மல்லர் தமது நிலைகுலைந்த நெஞ்சைத் திடப்படுத்திக் கொண்டு கனிவு ததும்பிய கண்களால் சிவகாமியை நோக்கினார்.

"சிவகாமி! உன்னுடைய நம்பிக்கை வீணாய்ப் போகவில்லையே? உனக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றத்தானே வந்திருக்கிறேன்? நூறு காத தூரம் காடும் மலையும் நதியும் கடந்து வந்திருக்கிறேன். பசி பட்டினி பாராமல், இராத் தூக்கமில்லாமல் வந்திருக்கிறேன். நான் ஏறி வந்த குதிரை ஏறக்குறையச் செத்து விழும்படி அவ்வளவு வேகமாய் வந்தேன். சற்றுமுன்பு நான் கூறிய கடு மொழிகளை யெல்லாம் மறந்துவிடு. யார் மேலேயோ வந்த கோபத்தை உன் மீது காட்டினேன். இத்தனை நாளைக்குப் பிறகு நம்முடைய சந்திப்பு இப்படிக் கோபமும் தாபமுமாயிருக்கும் என்று நான் நினைக்கவில்லை. எவ்வளவோ ஆசையோடு எத்தனையோ மனக்கோட்டை கட்டிக் கொண்டு வந்தேன்! — போனது போகட்டும், சிவகாமி! புறப்படு, போகலாம்!"

"பிரபு! மன்னியுங்கள்; இப்போது நான் வர மாட்டேன். என் சபதம் நிறைவேறிய பிறகுதான் வருவேன்."

"சிவகாமி! இது என்ன வார்த்தை? என்னுடன் வருவதற்கு உனக்கு விருப்

பம் இல்லையா, என்ன? தாமதிக்க நேரமில்லை.''

''இளவரசே! என் சபதத்தை நிறைவேற்றி வையுங்கள். பாதகன் புலிகேசியைக் கொன்று வாதாபி நகரத்தைச் சுட்டெரித்துவிட்டு உங்கள் அடிமையின் கையைப் பிடித்து அழைத்துச் செல்லுங்கள். அப்போது நிழல்போல் உங்களைத் தொடர்ந்து வருவேன்.''

''சிவகாமி! உன் சபதத்தை அவசியம் நிறைவேற்றி வைக்கிறேன். ஆனால், அதை நிறைவேற்றுவது எளிதல்ல. பெரும் படை திரட்டிக் கொண்டு தக்க ஆயுத பலத்தோடு வரவேண்டும். இதற்கெல்லாம் அவகாசம் வேண்டும்; பல வருஷங்கள் ஆகலாம்.''

''பல்லவர் குமாரர்தானா இப்படிப் பேசுகிறீர்கள்? வீர மாமல்லரா இப்படிப் பேசுகிறீர்கள்? புலிகேசியைக் கொன்று வாதாபியை வெற்றி கொள்



பது அவ்வளவு கடினமான காரியமா? இந்தப் பேதை தெரியாமல் சபதம் செய்துவிட்டேனே? பல்லவ குமாரா! தாங்கள் காஞ்சிக்குப் போய் இராஜ்ய காரியங்களைக் கவனியுங்கள். இந்த ஏழைச் சிற்பியின் மகளைப் பற்றிக் கவலை வேண்டாம்! நான் என்ன பாண்டிய இராஜகுமாரியா, சோழன் திருமகளா-தாங்கள் கவலைப்படுவதற்கு? நான் எக்கேடு கெட்டால் தங்களுக்கென்ன? என் சபதம் எப்படிப் போனால் என்ன?'' என்று சிவகாமி கசப்புடன் பேசினாள்.

''சிவகாமி! நீதான் பேசுகிறாயா? நீ பழைய சிவகாமிதானா?'' என்றார் மாமல்லர்.

''இல்லை, பிரபு! நான் பழைய சிவகாமி இல்லை. புதிய சிவகாமியாகிவிட்டேன். எனக்கு வாழ்க்கை கசந்து விட்டது. என் மனம் பேதலித்துவிட்டது. இந்தப் புதிய சிவகாமியை மறந்துவிடுங்கள். ஒரு சமயம் தங்களிடம், 'அடியாளை மறக்க வேண்டாம்' என்று வரம் கேட்டேன். இப்போது, 'மறந்துவிடுங்கள்' என்று வரம் கேட்கிறேன்!'' என்றாள் சிவகாமி.

''சிவகாமி! கேள்! நீ புதிய சிவகாமியானாலும் நான் பழைய மாமல்லன்தான். உன்னைப் பிரிந்திருந்த காலத்திலெல்லாம் ஒரு கணமேனும் உன்னை நான் மறக்கவில்லை. இரவிலும் பகலிலும், கனவிலும், நனவிலும், அரண்மனையிலும் போர்க்களத்திலும், என்ன செய்தாலும் யாரோடு பேசினாலும், என் உள்ளத்தைவிட்டு நீ ஒரு கணமும் அகலவில்லை. உன் பேரில் நான் கொண்ட பரிசுத்தமான காதலின் மேல் ஆணை வைத்துச் சொல்கிறேன்: நீ செய்த சபதத்தை நிறைவேற்றி வைக்கிறேன். இப்போது என்னோடு புறப்படு!'' என்று மாமல்லர் உணர்ச்சி மிகுதியினால் நாத் தழுதழுக்கக் கூறினார்.

கல்லையும் கனிய வைக்கக்கூடிய மேற்படி மொழிகள் சிவகாமியின் மனத்தைக் கனியச் செய்யவில்லை. பட்ட கஷ்டங்களினாலும் பார்த்த பயங்கரங்களினாலும் கல்லினும் கடினமாகியிருந்தது அவள் உள்ளம்.

''காதலாம், காதல்! காதலும் கல்யாணமும் இங்கே யாருக்கு வேண்டும்?'' என்றாள் சிவகாமி.

''நிஜமாகத்தான் சொல்கிறாயா? காதலும் கல்யாணமும் உனக்கு வேண்டாமா?'' என்று மாமல்லர் ஆத்திரத்தோடு கேட்டார்.

''நிஜமாகத்தான் சொல்கிறேன்: காதலும் கல்யாணமும் எனக்கு வேண்டாம். பழிதான் வேண்டும். வஞ்சம் தீர்க்க வேண்டும். புலிகேசி சாக வேண்டும். வாதாபி எரிய வேண்டும். வாதாபி மக்கள் அலறிப் புடைத்துக் கொண்டு அங்குமிங்கும் ஓட வேண்டும். வேறொன்றும் எனக்கு வேண்டாம்!''

மாமல்லர் மீண்டும் நயமான வார்த்தைகள் கூறினார்.

''சிவகாமி! உன் விருப்பத்தைத் தெரிந்து கொண்டேன். உன்னைக் காட்டிலும் நூறு மடங்கு என் உள்ளம் கொதித்துக் கொண்டிருக்கிறது. உன்னைச் சிறைப் பிடித்து வந்து அவமானப்படுத்திய பாதகனைப் பழி வாங்க என் மனம் துடித்துக் கொண்டிருக்கிறது. கட்டாயம் உன் சபதத்தை நிறைவேற்றி வைக்கிறேன். நீ மட்டும் இப்போது என்னுடன் புறப்பட்டு வந்துவிடு!''

''வரமாட்டேன், இளவரசே! ஆயனச் சிற்பியாரிடம், அவருடைய

# கைத்தறி வாரம்

மார்ச் 29 முதல்
ஏப்ரல் 14 வரை

## 10% தள்ளுபடி

அகில இந்தியாவிலிருந்து தருவிக்கப்பட்ட பட்டு மற்றும் நூல் புடவைகள். கண் கவர்பவை. வாஷ் அண்டு வேர் புடவைகள். சீர்-சக்கர், காஜ்ரக், உ.பி. ரகத்தில் தயாரான மாக்ஸி மற்ற ரெடிமேட் ஆடைகள் உள்ளன.

எழும்பூர் பொருட்காட்சி
ஹேண்ட்லூம் ஹவுஸ்
அரங்கத்துக்கு வாருங்கள்.

**ஹேண்ட்லூம் ஹவுஸ்**

9, ரத்தன் பஜார்,
சென்னை 600003



ADWAVE/HH/271/TAM

மகள் இறந்து போய்விட்டாள் என்று சொல்லி விடுங்கள் !''

''சிவகாமி! இது என்ன பிடிவாதம்? கடைசி வார்த்தையாகச் சொல்லுகிறேன், கேள்! உன்னுடைய சபதத்தை நான் கட்டாயம் நிறைவேற்றி வைக்கிறேன். ஆனால், இந்தச் சமயம் என்னுடன் நீ வராவிட்டால் என் மனம் கசந்து போய்விடும். என் அன்பை அடியோடு இழந்து விடுவாய்!''

''அன்பு வேண்டாம், சுவாமி! சபதத்தை நிறைவேற்றுங்கள்.''

''பெண்ணே ! பல்லவ குலத்தினர் ஒருநாளும் சொன்ன சொல் தவறுவதில்லை.''

''இளவரசே ! ஆயனச் சிற்பியின் மகளும் சொன்ன சொல்லை மாற்றுவதில்லை !''

''ஆகா! இதென்ன அகம்பாவம் ?'' என்றார் மாமல்லர்.



''ஆம், இளவரசே ! எனக்கு அகம்பாவந்தான். ஏன் இருக்கக் கூடாது ? பாண்டியன் மகளுக்கும், சேர இராஜகுமாரிக்கும்தான் அகம்பாவம் இருக்கலாமா? — நான் சிற்பியின் மகள்தான். ஆனாலும், செந்தமிழ் நாட்டு வீரப் பெண் குலத்திலே பிறந்தவள். காதலன் கழுத்திலே மாலை சூட்டிப் போர்க்களத்துக்கு அனுப்பிய மாதர் வம்சத்தில் பிறந்தவள். கண்ணகித் தெய்வம் வாழ்ந்த நாட்டில் நானும் பிறந்தேன். எனக்கு ஏன் அகம்பாவம் இருக்கக் கூடாது, பிரபு!''

சிவகாமியின் மனத்தைத் திருப்ப மேலே என்ன சொல்லலாம் என்று அவர் சிந்திப்பதற்குள், சேனாதிபதி பரஞ்சோதி பரபரப்புடன் உள்ளே வந்தார். மாமல்லரின் காதில் ஏதோ சொன்னார்.

மாமல்லரின் முகத்தில் ஒரு கணம் திகிலின் அறிகுறி தோன்றியது. மறு கணம் சமாளித்துக் கொண்டார். ''சேனாபதி! இந்த மூடப் பெண்ணின் பிடிவாதத்துக்கு முன்னால் நம்முடைய திட்டமெல்லாம் சின்னாபின்னமாகிவிடும் போல் இருக்கிறது!'' என்றார். சிவகாமியின் பக்கம் கோபமாகத் திரும்பி, ''பெண்ணே ! நீ வருவாயா? மாட்டாயா ? உன்னுடன் வாதமிட்டுக் கொண்டிருக்க நேரமில்லை!'' என்றார் மாமல்லர்.

அப்போது சேனாதிபதி பரஞ்சோதி குறுக்கிட்டு, ''அம்மணி! எங்களுடைய நிலைமையைத் தெரிந்து கொள்ளுங்கள். எதிரிகளின் கோட்டைக்குள்ளே தனியாக நாலு பேர் வந்திருக்கிறோம். கோட்டைச் சுவர் மீது நூலேணியுடன் கண்ணனும் அவன் தந்தையும் காத்துக் கொண்டிருக்கிறார்கள். கோட்டைக்கு வெளியில் இந்த நிமிஷத்தில் நரபலி கொடுக்கும் காபாலிகர்கள் எங்களைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். இங்கேயோ அந்தக் கள்ள பிக்ஷு நாங்கள் வந்திருப்பதை அறிந்து கொண்டு இதோ வீதி முனையில் வந்து கொண்டிருக்கிறார். தேவி ! இந்த நிலைமையில் தாங்கள் இப்படி வீண் விவாதம் வளர்த்தக் கூடாது'' என்றார்.

'பெண் புத்தி பேதைமை யுடைத்து' என்று முன்னோர் சொல்லியிருக்கிறார்கள் அல்லவா? அது உண்மை என்பதை நிரூபிக்கும்படி சிவகாமி அப்போது பேசினாள்.

'' ஐயா ! பல்லவ குமாரரும் அவருடைய அருமைத் தோழரும் கேவலம் மண்டை ஓட்டில் பிச்சை வாங்கும் காபாலிகருக்கும், காவித் துணி தரித்த புத்த பிக்ஷுவுக்கும் பயந்து ஓடுவார்கள் என்பது இதுவரையில் எனக்குத் தெரியாமல் இருந்தது. அதற்காக என்னை மன்னியுங்கள். நீங்கள் தப்பிப் பிழைப்பதை நான் குறுக்கே நின்று மறிக்கவில்லையே ? தாராளமாகப் போகலாம் '' என்றாள்.

பல்லவகுமாரருக்குக் காலாக்னியையொத்த கோபம் வந்தது. ''அடி பாதகி ! சண்டாளி ! இதன் பயனை நீ அநுபவிப்பாய்!'' என்று சீறினார். பின்னர் பரஞ்சோதியைப் பார்த்து, ''சேனாதிபதி ! இந்த வஞ்சகப் பாதகியின் நோக்கம் இப்போது தெரிந்தது. கள்ள பிக்ஷுவிடம் நம்மைக் காட்டிக் கொடுத்துவிட வேண்டும் என்பது இவள்

ஏப்ரல் 13ல் சித்திரைச் சிறப்பிதழில்

# கடைசிப் பக்கம்: கண்ணதாசன் எழுதுகிறார்



மோகினி! — அவளுடன் நான் சந்தோஷமாக
இருந்த நாட்களில் ஏதாவது ஒன்றை நினைத்து அசை
போட......வேண்டும் என்று முயல்கிறேன் முடியவில்லை!
என் வாழ்க்கையை நரகமாக்கி விட்ட படுபாவி அவன்!
அந்தஸ்தும் பணமும் என்னை எங்கே கொண்டு விட்டிருக்
கின்றன? ஷம்மீனுடன் ஓட்டலுக்குள் நள்ளிரவில்
திருடனைப்போல் நுழைந்து கொண்டிருக்கும் இந்தக்
கோழைக்கு......நான் கோழையா? மோகினி,
சொல்! நான் கோழையா?......




# தீவுகள்

இந்திரா பார்த்தசாரதி எழுதும்

புதிய தொடர் கதை ஆரம்பமாகிறது

எண்ணம். வாரும், போகலாம் !'' என்றார்.

அப்போது பரஞ்சோதி, ''பிரபு ! மன்னிக்க வேண்டும். நான் எல்லாம் கேட்டுக் கொண்டிருந்தேன். ஆயனர் புதல்வி அப்படி வஞ்சகம் செய்யக்கூடியவர் அல்ல. தான் செய்த சபதத்தை முன்னிட்டுத்தான் 'வரமாட்டேன்' என்கிறார்.....'' என்பதற்குள்ளே, மாமல்லர் குறுக்கிட்டார். ''தளபதி ! பெண்களின் வஞ்சகம் உமக்குத் தெரியாது. சபதமாம், சபதம் ! வெறும் பொய் ! வாதாபிச் சக்கரவர்த்தியின் மாளிகையைவிட்டு வருவதற்கு இவளுக்கு விருப்பமில்லை. வாரும் போகலாம்!'' என்று மாமல்லர் சேனாதிபதியின் கையைப் பற்றி இழுக்கத் தொடங்கினார்.

தளபதி பரஞ்சோதி நகராமல் நின்றார். ''பிரபு! இது நியாயமல்ல. சிவகாமி அம்மையை இங்கு விட்டுப் போவது பெரும் பிசகு. அவராக வருவதற்கு மறுத்தால், நாம் பலவந்தமாகத் தூக்கிக் கொண்டு போக வேண்டியதுதான் !'' என்றார்.

இந்த வார்த்தைகள் காதில் விழுந்ததும் சிவகாமியின் தேகமெல்லாம் சிலிர்த்தது. ஒரு சமயம் மாமல்லர் தன்னை விஷ நாகம் தீண்டாமல் கட்டிக் காத்ததாகக் கனவு கண்டதைப் பற்றிச் சொன்னது அவளுக்கு நினைவு வந்தது. 'அந்தக் கனவு இப்போது மெய்யாகாதா ? சேனாதிபதியின் யோசனைப்படி மாமல்லர் தன்னை நெருங்கி வந்து கட்டிப் பிடித்துத் தூக்கிக் கொண்டு போக மாட்டாரா ?' என்று எண்ணினாள். ஆகா ! அம்மாதிரி மாமல்லர் செய்திருந்தால், பின்னால் எவ்வளவு விபரீதங்கள் நேராமல் போயிருக்கும் !

விதிவசத்தினால் மாமல்லர் அவ்வாறு செய்ய மனங் கொள்ளவில்லை.

'' வேண்டாம், சேனாதிபதி ! வேண்டாம். இஷ்டமில்லாத பெண்ணை நாம் பலவந்தப்படுத்தி அழைத்துப் போக வேண்டியதில்லை. இவளுக்கு நான் கொடுத்த வாக்குறுதியை ஒரு சமயம் நிறைவேற்றுவேன். பிறகு இஷ்டமானால் வரட்டும். அதுவரையில் அந்தக் கள்ள பிக்ஷுவையே கட்டிக் கொண்டு அழட்டும் !'' என்று மாமல்லர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே சத்ருக்னனும் குண்டோதரனும் உள்ளே ஓடோடியும் வந்தார்கள்.

''பிரபு! பிக்ஷு வீதி முனையில் வருகிறார். அவருடன் வந்த வீரர்களில் பாதிப் பேர் வீட்டின் கொல்லைப் பக்கமாகப் போகிறார்கள்!'' என்று சத்ருக்னன் மொழி குளறிக் கூறினான்.

பரஞ்சோதி மறுபடியும் சிவகாமியின் பக்கம் நோக்கிப் பரபரப்புடன், ''அம்மா !'' என்றார்.

'' வேண்டாம், தளபதி ! வேண்டாம். இந்தக் கிராதகி நம்மைக் கள்ள பிக்ஷுவிடம் காட்டிக் கொடுக்கத்தான் பார்க்கிறாள்! வாரும் போகலாம் !'' என்று மாமல்லர் இரைந்து கூறிப் பரஞ்சோதியின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு அம்மாளிகையின் பின்புறமாக விரைந்தார். அடுத்த கணம் அவர்கள் நால்வரும் சிவகாமியின் பார்வையிலிருந்து மறைந்தார்கள்.

(தொடரும்)



சித்திரைச் சிறப்பிதழில் சிரிப்புச் சித்திரத் தொடர்

கட்சி மாறும் பட்சி!

கதை: குட்டி கிருஷ்ணன்

சித்திரம்: ராஜு



# கொசுகள் அதிகமாகி வருகின்றன...

(டிடிடிக்கு எதிர்ப்பு பெறுகின்றன)

## ஏன் துன்பப்பட வேண்டும்?

உபயோகிப்பீர்

# ரிப்லெக்ஸ்

ரிப்லெக்ஸில் கலந்துள்ள விசேஷப் பொருட்கள் கொசுக்களை விரட்டியடிக்கின்றன! மனத்துக்கினிய நறுமணம் வாய்ந்ததும், வழவழப்பானதுமான, க்ரீம் தன்மையுடைய ரிப்லெக்ஸ் உங்கள் சருமத்திலிருந்து உடனே மறைகிறது. கொசுக்கள் மற்றும் பூச்சிகள் கடியிலிருந்து பலமணி நேரங்கள் உங்களைக் காப்பாற்றுகிறது.




**இலவசம்!**

ஒவ்வொரு ட்யூப் ரிப்லெக்ஸுடனும் வண்ண வண்ண துணி உலர்த்த உதவும் க்ளோ-பெக்ஸ்

# THERE ARE ONLY TWO KINDS OF WOMEN-

## THOSE WHO READ *femina* AND THOSE WHO DON'T

## WHICH KIND ARE YOU?

**If you are not already one among our 16 lakh readers*, do yourself a favour.....start ordering your copies of Femina today.**

Twice every month, Femina will speak on issues that need to be talked about. We will take you from the metros to the suburbs, from the small towns to the villages, to show you the new Indian woman at work and in the home. We will bring you her ideas on health, politics, the economy, clothes, furniture, films and books—the whole business of living—right up to your doorstep. Maybe you will want to give Femina to your husband, your children, your friends. So that they can understand you better. Don't wait another day !

*BUY YOUR COPY TODAY!!*

*Source : ORG Survey

*femina*

INDIA'S FASTEST GROWING FORTNIGHTLY



தாஜ் கோரமண்டல்ஹோட்டலில் ஒய். எம். ஏ. அதன் பொன் விழாவைத் தமிழக கிரிக்கெட் சங்கத் தலைவர் திரு எம். ஏ. சிதம்பரம் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடியது. நிதி மந்திரி திரு சி. சுப்பிரமணியம் சிறப்புரை ஆற்றினார். இந்தப் பொன் விழாவில் ஒய். எம். ஏ. ஸ்தாபகர் கண்ணன், கிரிக்கெட் சங்கக் காரிய தரிசி ஸ்ரீராமன், (படம்) கிரிக்கெட் மன்னன் வேங்கடராகவன் ஆகியோர் தங்க மோதிரம் பரிசளித்துக் கௌரவிக்கப்பட்டனர். பொன் விழாக் கண்ட ஒய். எம். ஏ. நூற்றாண்டு விழாக் கொண்டாட வி. ஆர். பட்டாபிராமனும், தொழிலதிபர் கே. சகவாறும், ஸ்பிக் உதவி சேர்மன் ஸ்ரீவத்ஸாவும் வாழ்த்தினர்.

தமிழ் வாசகர் மாநாடு மயிலாப்பூர், ஸ்ரீநிவாச சாஸ்திரி ஹாலில் 16-3-75 அன்று நாரணதுரைக்கண்ணன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சென்னை உயர்நீதிமன்றத்து நீதிபதி திரு கோகுலகிருஷ்ணன், முன்னாள் முதலமைச்சர் பக்தவத்சலம், திரு கி.வா.ஜ. ஆகியவர்கள் தற்சமயம் தமிழ்ப் பத்திரிகைகளில் தலைதூக்கி வரும் தரக்குறைவு குறித்துக் கவலை தெரிவித்துப் பேசினர்.





கலைமாமணி திரு எஸ். டி. சுந்தரம் அவர்களுக்குச் சிறந்த நாடகாசிரியர் என்ற மத்திய சங்கீத நாடக அகாடமியின் புகழுக்குரிய விருது வழங்கப் பட்டமைக்காக அண்மையில் ஒரு பாராட்டு விழா நடந்தது. தமிழ்நாடு ஆளுநர் கே. கே. ஷா அவர்கள் தலைமை தாங்கினார். நிதியமைச்சர் திரு சி. சுப்பிரமணியம் கவிஞர் எஸ். டி. சுந்தரத்தின் கவிதை நூல்களை வெளியிட்டார். ராஜா ஸர் முத்தையா செட்டியார் அவர்கள் கவிஞருக்குப் பொன்னாடை அணிவித்தார். மற்றும் பலர் பாராட்டுரை வழங்கினர்.



திரு எஸ்.கே. மூர்த்தியின் புதல்வி குமாரி மதுமதியின் நடன அரங்கேற்றம் சென்னை உயர்நீதிமன்றத்து நீதிபதி ஸ்ரீ டி. ராமபிரசாத ராவ் அவர்களின் தலைமையில் விமரிசையாய் நடந்தேறியது. பரதம், குச்சிபுடி இரண்டிலும் செல்வி மதுமதி பயிற்சி பெற்றிருந்தாலும் குச்சிபுடி நடனமே சிறப்பாயிருந்தது.

தமிழ்நாடு மக்கள் பேரவை ஏற்பாடு செய்த பாபநாசம் சிவன் நினைவு விழாவில் கவர்னர் கே.கே. ஷா பேசுகிறார். டி. கே. பட்டம்மாள், பாபநாசம் சிவன் புதல்விகளான நீலா ராமமூர்த்தி, ருக்மிணி ரமணி ஆகியவர்கள் மேடையில் உள்ளனர்.



# எளிய தமிழில் ஸ்ரீ மஹா பாரதம்

**ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியா அளிக்கும் ஒரு அரிய வாய்ப்பு**

ஸ்ரீ வ்யாஸ பகவான் அருளிய ஸ்ரீ மஹா பாரதத்தை இனிய தமிழில் எளிய முறையில் சிறுவரும் அறியும் வண்ணம் மொழிபெயர்த்து ராக்ஷஸவருஷ சித்திரை (எப்ரல் 1975) இதழ் முதல் ப்ரசுரிக்கிறது ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியா. ஸ்ரீ அழகிய சிங்கரின் அருள்மொழிகள், ஸ்ரீரங்கராஜஸ்தவம், பகவத்கீதை முதலியனவும் தொடர்ந்து ப்ரசுரங்களாகும்.

மஹாபாரத தமிழ் மொழி பெயர்ப்பு ஸமீபத்தில் ப்ரசுரமாகவில்லை. பல காலங்களுக்கு முன் ப்ரசுரமானதும் தற்சமயம் கிடைக்காது. ப்ரதிமாதமும் 32 பக்கங்கள் சிறந்த வெள்ளைக் காகிதத்தில் தனியாக பெயிண்ட் செய்து வைத்துக் கொள்ளும் வகையில் ப்ரசுரமாகும்.

புதியதாக மெம்பராகச் சேருபவர்கள், ஏப்ரல் முதலே சந்தாதாரர்களானால்தான் மஹாபாரதம் விடாமல் முழுக்கக் கிடைக்கும். பிறகு மெம்பராகச் சேர்கின்றவர்களுக்குப் பழைய காபிகள் கிடைப்பதரிது. ஆகையால் இந்த அரிய வாய்ப்பை யாரும் இழக்க வேண்டாம் என்று பணிவன்புடன் வேண்டுகின்றோம்.

ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியாவின் வருஷச் சந்தா 15 ரூபாய். தனிப்ரதியின் விலை ரூ. 1-50.




பணம் செலுத்தவேண்டிய விலாஸம்:
மேனேஜர்
ஸ்ரீ ந்ருஸிம்ஹ ப்ரியா
7 டாக்டர் ரங்காசாரி ரோடு
சென்னை 600 018



ரப்பர் கலந்த நார்த் தயாரிப்புகளைப் பார்வை இடுகிறார் திரு. ஆர். வி.

★

ரப்பர் கலந்த நாரினாலான தரை விரிப்புகள் உருவாகின்றன.

# பாங்கான பொருள்களுக்குத் தேங்காய் நார்!



ஒரு நாளைக்கு இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட கார்களை உற்பத்தி செய்யும் மேற்கு ஜெர்மானிய ஃபோக்ஸ் வாகன் நிறுவனத்துக்கு, பாரத் மோட்டார்ஸ் நிர்வாகிகளில் ஒருவரான திரு சீனிவாசன் விஜயம் செய்த போது, அங்கே ஒரு மூலையில் தேங்காய் நார்களைக் குவித்து வைத்திருப்பதைக் கண்டார்.

"இந்தத் தேங்காய் நார்களை எதற்குக் குவித்து வைத்திருக்கிறீர்கள்?" என்று வியந்து கேட்டார்.

"அதுவா? மோட்டார் குஷன் செய்ய நாங்கள் இந்தத் தேங்காய் நாரைப் பயன்படுத்துகிறோம். முற்காலத்தில் குதிரை மயிரிலும் பன்றி மயிரிலும் 'குஷன்' தயாரித்து வந்தோம். ஆயிரக்கணக்கான கார்களுக்குத் தேவையான குதிரை மயிருக்கும், பன்றி மயிருக்கும் எங்கே போவது? எனவே, தேங்காய் நாரைப் பயன்படுத்தும் முறையைக் கைக் கொண்டோம்!" என்றார் மேற்கு ஜெர்மனி கார்த் தொழிற்சாலை நிர்வாகி.

மேற்கு ஜெர்மனியிலிருந்து சென்னை திரும்பியதும் மாப்பிள்ளை சீனிவாசன் தம் மாமனார் திரு என். ஆரிடம் தாம் கண்டதை விவரித்தார். "தேங்காய் நாரிலிருந்து 'குஷன்' போன்ற தயாரிப்புக்கள் செய்யலாம். நம் மோட்டார் தொழிலோடு இதையும் உப தொழிலாக வைத்துக் கொள்ளலாம்!" என்றார்.

"அப்படியா?" என்ற 'என்ஆர்' இந்தப் புதிய தொழில் பற்றிய அத்தனை விஷயங்களையும் தமக்கு உண்டான அநுபவ அறிவுடன் ஆராய்ந்து பார்த்தார்.



என். ஆர்.

'என்ஆர்' என்று சுருக்கமாக அன்புடன் அழைக்கப்படும் திரு என். ராமச்சந்திரய்யர் ராலே கம்பெனியில் காரியதரிசியாகப் பணி புரிந்த போது அவரது நிர்வாகத் திறமை சுடர் விட்டுப் பிரகாசிக்கவே, ஜெனரல் மோட்டார் ஸ்தாபனம் அவருக்கு மோட்டார் பாகங்கள் விற்பனைப் பகுதியைச் சென்னையில் தொடங்கும் உரிமையைத் தந்தது. இது தான் பாரத் மோட்டார்ஸ் என்று விரிந்து பரந்து சென்னையில் புகழ் பெற்று விளங்க வித்தாக இருந்தது.

தொழில் துறையில் தமக்குள்ள அநுபவம், துணிவைத் தரவே ஆஸ்திரியாவிலிருந்து இயந்திரங்களை இறக்குமதி செய்தார். என். ஆர். திருநெல்வேலி – பேட்டையில் இந்தத் தொழிலகம் அமைவதற்கு முயற்சி எடுத்துக் கொண்டார். 'ஃபைப்ரோப்ளெக்ஸ்' ஸ்தாபனம் தேங்காய் மட்டையிலிருந்து உறுதியான நார் தயாரிக்கும் தொழிலில் ஈடுபட்டது! அது மட்டுமல்ல; இந்தத் தேங்காய் மட்டை நார் தயாரிக்கும் இயந்திரங்களையும் உருவாக்க முன் வந்தது. 'என்.ஆர்'ரின் நார் தயாரிப்பு இயந்திரங்கள் இன்று இருபத்திரண்டு நகரங்களில் இயங்கி வருகின்றன.

வீட்டை அலங்கரிக்கும் சோபா செட்டுகள், மெத்தைகள், குஷன்கள் பல தேங்காய் நாரிலிருந்து தயாரானவை என்று அவற்றைப் பார்த்தால் தெரிவதில்லை.

"ரப்பர் குஷன்கள் உஷ்ணமானவை. ஆனால் இந்தத் தேங்காய் நாரினால் தயாரான குஷன்கள் சூடு தரமாட்டா. பல ஆஸ்பத்திரிகளிலும் இந்தத் தேங்காய் நார் மெத்தைகளையே பயன்படுத்துகிறார்கள்!" என்று விளக்கினார் திரு சீனிவாசன்.

"நீங்கள் அமைத்துள்ள இந்தப் பிரும்மாண்டமான இயந்திரங்களுக்குக் கோடிக்

நியூயார்க்கில் பேப்பர் தர்மாமீட்டரைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இந்தத் தர்மாமீட்டரை நோயாளியின் உடல் மீது வைத்தால் போதும். பேப்பரில் உள்ள வண்ணத்தில் மாறுபாடு தெரியும். அதன்படி இத்தனை ஜுரம் என்று தெரிந்து கொண்டு தர்மாமீட்டரைத் தூக்கி எறியலாம். - வொர்ல்ட் நியூஸ் - எம். எஸ்

கணக்கான தேங்காய் மட்டைகள் தேவைப்படுமே. நம் தமிழ்நாட்டில் அத்தனை தென்னை மரங்கள் இருக்கின்றனவா?'' என்று வினவினேன்.

'' இல்லை தான்; தென்னந்தோப்புகள் மலிந்த கேரளத்திலும் இந்த இயந்திரங்களின் 'பசி'க்கு இரை போட்டு முடியாது போலிருக்கு. தென்னை மர நாடுகளான மலேசியா, இந்தோனீசியா, ஜான்சிபார் ஆகியன இந்தத் 'தேங்காய் நார்' தயாரிப்புத் தொழிலில் ஈடுபட முன்வந்தால் அங்கே யெல்லாம் இந்த இயந்திரங்களை நாங்கள் ஏற்றுமதி செய்யலாம்!'' என்று கூறினார் திரு சீனிவாசன். தொடர்ந்து சொன்னார்:

'' கேரளத்தில் தேங்காய் மட்டைகளை நாலு மாதங்கள் ஊற வைத்துப் பின்னர் தான் நார் தயாரிக்கிறார்கள். எங்கள் இயந்திரங்களுக்கு நாலு நாட்கள் பச்சை உரி மட்டையை நீரில் ஊற வைத்தால் போதும்! எங்கே வேலையில்லாப் பிரச்னை தலைதூக்கி விடுமோ என்று கேரளத்தில் எங்கள் இயந்திரங்களைப் பயன்படுத்தத் தயங்குகிறார்கள்! அப்படியும் அங்கே மூன்று இடங்களில் எங்கள் நார் தயாரிக்கும் இயந்திரங்கள் செயல்பட்டு வருகின்றன!''

'என்ஆர்' என்ற உழைப்புச் சக்தி ஐம்பத்தைந்து வருஷ சேவைக்குப் பிறகு, எழுபத்தெட்டாம் வயதிலும் தொழிலகத்தின் அபிவிருத்தியில் ஈடுபட்டு வருகிறது; இதற்கு மாப்பிள்ளை சீனிவாசனும், மகன் ரகுராமனும் உறுதுணையாக நின்று உதவி வருகிறார்கள்.

''ஈத்துவக்கும் இன்பம்'' என்று குறளாசிரியர் குறிப்பிடும் உயர்ந்த இன்பத்தையும் நன்கு உணர்ந்தவர் என். ஆர்.

ஈட்டிய பொருளைத் தெய்வீகக் கைங்கரியங்களிலும், தர்ம காரியங்களிலும் ஈடுபடுத்துவதில் என். ஆர். என்றும் பின்தங்கியதில்லை.

— பி. எஸ். எம்.

# தீவார்

**சுவர் என்ற தலைப்புக் கொண்ட படம்தான்; நல்லவேளை குட்டிச்சுவராகவில்லை!**

விஜய், ரவி இருவரும் அண்ணன் தம்பிகள். மூத்தவன் கடத்தல் தொழிலால் மேம்பாடு அடைந்தவன். இளையவன் காவல் துறையில் நாணயமாக உழைத்து முன்னேறிப் பதக்கம் பெற்றவன்.

இந்தச் சுவடு தட்டிய கதைக்கு உயிர் ஊட்டி மெருகு ஏற்றுபவை உணர்ச்சி மிகுந்த சிறப்பான நடிப்பு; உயிருள்ள உரையாடல்.

ஸலீம் ஜாவேத் திரைக் கதையைக் கொண்டு போயிருக்கும் முறை முற்றிலும் மாறான புதிய கதையென்ற கருத்தை இழையோட வைக்கிறது. அங்கு அங்கு 'அப்ளாஸ்' வாங்கும் வசனங்கள் நடிகர்களுக்கும் பெருமை தேடித் தருகின்றன.

அண்ணன் தம்பி இருவரையுமே தந்தையின் ரத்தம் ஓடுபவர்களாகக் காட்டியிருப்பதும், தாய்ப் பாசம் மிக்கவர்களாகச் சித்திரித்திருப்பதும், உள்ளப் போரைத் திறம்பட எடுத்துக் காட்ட உதவும் உத்திகள்.

அமிதாப் பச்சன் அண்ணன் விஜயனாக நடிப்பில் முதல் பரிசைத் தட்டிக் கொண்டு போகிறார். சசிகபூர் தாம் நடிப்பில் 'தம்பி'தான் என்பதை இனம் காட்டுகிறார். நிருபாராய் அன்னையாக வந்து தாய்ப் பாசத்துக்கு இலக்கணமே வகுத்துக் காட்டி விடுகிறார்.

இம்மூவரும் சேர்ந்து இடையிடையே தலையெடுக்கும் நீதுசிங், பரவீன் பாபி இருவரது கவர்ச்சிக் காட்சியைக் கூடப் பகைப்புலனில் தள்ளி விடுகிறார்கள்! எனவே விரசம் வீழ்ந்து ரசம் தலையெடுத்து நிற்கிறது படத்தில்.

இயக்குநர் யஷ்சோப்ராவின் பெருமையில் பாடல் எழுதிய ஸாஹிருக்கும் இசை அமைத்த ஆர். டி. பர்மனுக்கும் பங்கு உண்டு.

'சுவர்' என்ற தலைப்புக் கொண்ட இந்தப் படம் குட்டிச்சுவராகவில்லை; நிமிர்ந்து நிற்கிறது. -ரா. வி.





# எம். கல்யாணசுந்தரம்

சொல்பவர்: கே. எம். சுந்தரம்

## தலைவர் தரிசனம்

## 10

**1946**ம் ஆண்டில் ராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள மண்டபத்தில் நடந்த ரயில்வே லேபர் யூனியன் மகாநாட்டில் கலந்துகொள்ளத் திரு கல்யாணசுந்தரம் வந்திருந்தார். இளைஞனை என்னை நண்பர் சி. சம்பந்தம், கல்யாணசுந்தரம் அவர்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். அப்போது அரும்பிய எங்கள் அன்னியோன்னியம் மலரத் தொடங்கியது.

தொடர்ந்து அந்த ஆண்டில் பெரிய அளவில் ரயில்வே வேலைநிறுத்தத்துக்கான ஆயத்தங்கள் தொடங்கப்பட்டபோது நான் அவருக்கு உதவியாளனாகத் திருச்சிக்கே போய் விட்டேன். பொதுக் காரியதரிசி நம்பியாரும், தொழிலாளர் தலைவர் கல்யாணசுந்தரமும் தலைமறைவாகப் போனபோது, அவர்களிடையே அவ்வப்போது தூது போகும் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டேன்.

கல்யாணசுந்தரம் ரயில்வே குமாஸ்தாவாக உத்தியோகத்துக்கு வந்தவர்தாம். ஊழியராக இருந்தபோதும் சரி, உத்தியோகத்தை உதறித் தள்ளிவிட்டு ஊழியர்கள் தலைவரான பிறகும் சரி, எந்தச் சிறிய காரியத்திலும் அவருடைய நிர்வாகத் திறமை பளிச்சென்று பிரகாசிக்கும். தேசிய இயக்கங்களில் பங்கு கொண்டார் என்பதற்காக அந்த நாளைய 'சவுத் இந்தியன் ரயில்வே' நிர்வாகம் அவரை வெளியே அனுப்பியது. அதன் பலனாக ரயில்வே ஊழியர்கள் அனைவருக்கும் ஒரு நல்ல தலைவர் கிடைக்கவும் மறைமுகமாக உதவியது.

தொழிலாளர்களுக்கு முதல் தடவையாக மத்திய அரசிடமிருந்து பிரிட்டிஷார் ஆண்ட காலத்திலேயே இடைக்கால நிவாரணம் கிடைக்க உதவி செய்தவர் என்ற பெருமை இவருக்கு உண்டு.

அப்போது ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயணன் அகில இந்திய ரயில்வே தொழிலாளிகள் சம்மேளனத்தின் தலைவர். கல்யாணசுந்தரம் துணைத் தலைவர். ரயில்வே வேலைநிறுத்தத்துக்கு ஆதரவு தேடும் வகையில் ரகசிய வாக்கெடுப்பு நடந்த நேரம். இதைத் தில்லியிலிருந்து அபுல்கலாம் ஆசாதும் ஆதரித்துப் பேசிவிட்டார்.

அவ்வளவுதான் ! பிரிட்டிஷ் அரசாங்கம் உஷாராயிற்று. அப்போது வைசிராயாக இருந்த வேவல்துரை, தலைவர்களைச் சந்தித்துப் பேச விரும்பினார். ஜெயப்பிரகாஷ் நாராயணனும் கல்யாணசுந்தரமும் தில்லிக்குப் போனார்கள். ஏறக்குறைய ஒன்பது கோடி ரூபாய் இடைக்கால நிவாரணம் அளிக்க முன்வந்து அரசாங்கம் வேலைநிறுத்தத்தைத் தவிர்த்தது. இடைக்கால நிவாரணம் என்று கிடைத்தது இதுதான் முதல் தடவை !

இந்தப் பேச்சு வார்த்தைகளில் கலந்து கொண்டு கல்யாணசுந்தரம் அவர்கள் மதுரைக்குத் திரும்பி வந்தபோது அவருக்குக் கிடைத்த மகத்தான உற்சாகம் பொங்கிய வரவேற்பை இன்றும் அந்த நாளைய மதுரைவாசிகள் மறந்திருக்க மாட்டார்கள். பிளாட்பாரம் எங்கும் ரோஜா மலர் மாலைகள் போட்டுக் கொண்டே இருந்தார்கள். பிளாட்பாரத்தில் நடந்தவர்கள் எல்லோரும் ரோஜா இதழ்கள் மீதுதான் நடந்து போனார்களாம்!

இதற்கு முற்றிலும் மாறுபட்ட ஒரு சோகமயமான வரவேற்புக்கும் எதிர்பாராதவகையில் அதே மதுரை பிளாட்பாரத்தில் திரு கல்யாணசுந்தரம் பாத்திரமானார்.

முதல் நாள், கல்யாணசுந்தரம் அவர்களின் ஒரே குமாரத்தி திருச்சியில் விஷக் கடியால் காலமாகிவிட்டிருந்தாள். சுற்றுப்பயணத்தில் இருந்த கல்யாணசுந்தரத்துக்குத் தகவல் கொடுத்து அழைத்து வந்தார்கள். பகலில் மகளின் அந்திம ஊர்வலத்தில் கலந்துகொண்டார். பாசம் ஒருபுறம். கடமை ஒருபுறம். அன்று மாலையில் பொன்மலையில் ஒரு தொழிலாளர் கூட்டத்தில் பேசுவதாக ஏற்பாடு. பலர் நினைத்ததுபோல, இவர், அந்த நிகழ்ச்சியை ரத்து செய்யவில்லை. அன்று மாலையிலேயே தொழிலாளர் முன், தம் சொந்த இழப்பை மறைத்துக் கொண்டு பேசிவிட்டுத் தான் வந்தார்.

மறு நாள் மாலை மதுரை நகரில் தோழர் ரணதேவ் ஒரு பொதுக் கூட்டத்தில் பேச அன்று முற்பகல் வந்து சேரும் தூத்துக்குடி எக்ஸ்பிரஸில் வருவதாக ஏற்பாடு. பழைய



"ஏதேன்னடி! பஞ்சகச்சம் கட்டிட்டு, ஜிப்பா, அங்கவஸ்திரத்துடன் வெளியே கிளம்பிட்டே?"

"நான் ஏன், பேண்ட் போட்டு அலுத்து விட்டது!"



**பணக்கார நாடோடி!**

ஊர் ஊராகச் சுற்றுபவன் ஏழையாக இருந்தால் அவன் 'நாடோடி'. அவனே பணக்காரனாக இருந்து விட்டால் அவனுக்குப் பெயர் 'டூரிஸ்ட்'.

-கலெக்ஷன் — பாலி

இட்டப்படி கல்யாணசுந்தரமும் ரணதேவுடன் வருவதாக இருந்தது. ஆனால் முதல் நாள் சோக சம்பவத்தைத் தொடர்ந்து மதுரை நண்பர்கள், கல்யாணசுந்தரம் மதுரைப் பிரயாணத்தை மேற்கொள்ளமாட்டார் என்று தான் நினைத்தனர். ரணதேவை வரவேற்க ஏராளமான தோழர்கள் மதுரை ரயில் நிலையத்தில் குழுமியிருந்தார்கள்.

தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் வந்து மதுரை நிலையத்தில் நின்றது. கதவைத் திறந்து கொண்டு தோழர் ரணதேவ் நின்றார். அவர் பக்கத்தில் கல்யாணசுந்தரமும் நின்றார்!

அவ்வளவுதான்! அங்கே குழுமியிருந்தவர்கள் அனைவர் கண்களிலும் நீர் பொங்கியது. யாருக்கும் என்ன பேசுவது என்று தெரியவில்லை. தங்கள் மௌனத்தினால் அவருடைய துக்கத்தைப் பகிர்ந்து கொண்டார்கள்!

ஆங்கிலேயர் ஆட்சியில் இவர் அலிப்பூர் ஜெயிலில் இருந்தபோது சில கைதிகள் தப்பி ஓடி விட்டார்கள். அரசியல் கைதிகளைக் கொடுமையாக நடத்திய தலைமை வார்டரை மாட்டி வைக்க விரும்பிய கல்யாணசுந்தரம், தப்பியோடிய கைதிகள் வார்டருடன் அன்று அதிகாலையில் கூடிப் பேசிக் கொண்டிருந்ததைத் தாம் பார்த்ததாக மேல் அதிகாரிகளிடம் கூறிவிட்டார்.

தலைமை வார்டர் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டது. அந்த வார்டர் தாம் கைதிகளை நடத்தியவிதத்துக்காக வருந்தியபோது கல்யாணசுந்தரமே அவருக்கு உதவ முன் வந்தார்! விசாரணையில் அவர் கூற வேண்டிய வாதங்களைத் தயாரித்தளித்தார்! வார்டர் மீது தவறில்லை என்று நிரூபணமாயிற்று!

1969ம் ஆண்டு ஜூன் மாதத்தில் திருச்சி மதுரம் விளையாட்டுத் திடலில் இவருடைய மணிவிழா வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அந்த நேரத்தில் நண்பர்களும் அன்பர்களும் இவருக்குத் தொடர்ந்து மாலைகள் அணிவிக்க மாத்திரம் ஐம்பத்தைந்து நிமிடங்களை எடுத்துக் கொண்டார்கள்.

இருந்த இடத்திலிருந்தே பிரச்னைகளை ஆராய்வது என்பது இவர் வழக்கமல்ல. பிரச்னைகள் எங்கே தோன்றுகின்றனவோ அங்கேயே போய் நேரடியாகக் கவனிப்பது இவர் லட்சியம்.

வலுவான பேச்சாளர். தமக்கு என்று ஒரு சொந்தப் பாணியை வைத்துக் கொண்டு கேட்பவர்கள் மனத்தில் விஷயம் பதியும்படி பேசுவதில் வல்லவர்.

எதிர்க்கட்சிக்காரர்களை ஜென்ம விரோதியாகக் கருதும் சுபாவம் இவரிடம் கிடையாது. எல்லோரும் இவருக்கு நண்பர்களே. எதிர்க்கட்சிகளின் நோக்கங்களைக் கடுமையாக விமரிசிக்க வேண்டிய நேரங்களில், இவர் பேச்சில் எந்தவித தரக் குறைவையும் காண முடியாது.

இளைய தலைமுறையினரை ஊக்குவிப்பதிலும் அவர்கள் வளர்ச்சியிலும் நிறைய ஆர்வம் காட்டுவார். தோழர் கே. டி. கே. தங்கமணி அவர்கள் 1957ல் மத்திய பாராளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டபோது கல்யாணசுந்தரம் அவரை ராஜாஜி அவர்களிடம் அழைத்துப் போய் விஷயத்தைச் சொன்னார். அப்போது ராஜாஜி கூறிய அறிவுரைகள் இவைதாம்: 'பாராளுமன்றத்தில் பேச வேண்டியதை முன்கூட்டியே நன்கு யோசித்துப் பேச வேண்டும். இரண்டாவதாக, நாம் பேசியது மறு நாட் காலைப் பத்திரிகைகளில் பிரசுரமாகியிருக்கிறதா என்று தேடக் கூடாது!'

தொழிலாளர் நலக் கொள்கைகளைப் பொறுத்தவரை எதையும் நிர்வாகத்துடன் சுமுகமாகப் பேசித் தீர்த்து நன்மை காணலாம் என்ற கொள்கை உடையவர். அப்படியே ஏதாவது நிர்ப்பந்தச் சூழ்நிலையினால் தொழிலாளர்கள் சிறைக்கு அனுப்பப்பட்டால் இவர் அவர்களைப் பார்த்து உற்சாகப்படுத்திவிட்டு வருவார்.

ரயில்வே ஊழியர்களின் குடும்பத்தினர் அனைவருக்குமே கல்யாணசுந்தரம் என்ற பெயர் நன்கு பரிச்சயமானது. ஒவ்வொரு தொழிலாளியிடமும் தம் குடும்பத்து நெருங்கிய உறவினர்போல் பல விஷயங்களை நினைவில் வைத்துக் கொண்டு பாசத்துடன் பேசும் பழக்கம் இவரிடம் உண்டு.

ஓய்வே இல்லாமல், ஓய்வைப் பற்றியே நினைக்காமல், நேரக் கட்டுப்பாடு இல்லாமல் உழைப்பவராக இருப்பதால் இவர் உடல் நிலை பாதிக்கப்படுகிறது. வெளிநாடுகளில் வைத்தியம் செய்து கொண்டு வந்தாலும், இங்கு வந்தவுடன் தம்மை மறந்து பல பிரச்னைகளில் மூழ்கிவிடுவதால் அவருக்கு ஓய்வு கிடைப்பதில்லை. திரு கல்யாணசுந்தரம் முழுக்க முழுக்கச் சுத்த சைவம் — உணவு விஷயத்தில்!

கேட்டு எழுதியவர்: **கோமதி சுவாமிநாதன்**

மேலட்டை வண்ணப் படம்: **உத்தரா**

# புதிய அனுபவம், பேரானந்தம்



செஞ்சுரி
பருத்தித் துணிகள்



செஞ்சுரி -100% பருத்தித் துணிகள்

தி செஞ்சுரி ஸ்பின். அண்டு மானுபு.
கம். லிமிடெட், பம்பாய்-400 025.

ADROIT/925



பிலிப்ஸின் சகோதரர் பிரான்ஸிஸ் பேசுகிறார்: "எங்கள் குடும்பமே விளையாட்டுத் துறையில் மூழ்கியுள்ள குடும்பம். வின்சென்ட் தமிழக கால் பந்தாட்டக்காரர். மூன்று ஒலிம்பிக்கில் கலந்து கொண்ட பீட்டர் மற்றொரு சகோதரர். நான் பாக்ஸர். இளம் சிங்கம் தாமஸ் தென்னிந்திய ரயில்வே ஹாக்கி ஆட்டக்காரர்."

இரவு பத்தரை மணி. அஜித் பால் ஏழு லட்சம் மதிப்புள்ள உலகக் கோப்பையை ஏந்தி வர, மானேஜர் பல்பீர் முன்னணியில் நடத்திச் செல்லத் தமிழக மண்ணில் உலக ஹாக்கி வீரர்கள் வீரநடை போடுகிறார்கள்.

மானேஜர் பல்பீரிடம், "பல வருஷங்களாகக் கிடைக்காத வெற்றியைக் கோலாலம்பூரில் எப்படிச் சம்பாதிக்க முடிந்தது?" என்று வினவுகிறோம்.

"நம் இந்திய ஹாக்கி வீரர்களின் 'டீம் ஸ்பிரிட்' ஏ ஒன்! இந்தியக் கோஷ்டி முதலில் ஐரோப்பிய பாணி ஆட்டத்தைப் பின்பற்றி வந்தது. பிறகு இரண்டும் கலந்த ஆட்டம். தோல்வி தந்தது. இந்தத் தடவை கோலாலம்பூரில் இந்தியக் கோஷ்டி நம் ஆசிய பாணி ஆட்டத்தைக் கையாண்டதில் மாபெரும் வெற்றி கண்டது!" என்று இந்தியக் கோஷ்டியின் மானேஜர் பல்பீர் சிங் விளக்கினார்.

○ காப்டன் அஜித்பால் உலகக் கோப்பையுடன்.

# முதல் போட்டியில் மூன்றாவது இடம்;

மீனம்பாக்கம் விமான நிலையம். மலேசியாவிலிருந்து உலக ஹாக்கி வெற்றி வீரர்களை அழைத்து வரும் ஏர் இந்தியா விமானத்துக்கு அத்தனை சீக்கிரம் அவர்களை இந்திய மண்ணில் இறக்கிவிட விருப்பமில்லைபோலும்! தாமதமாகிக் கொண்டிருந்தது!

வி. ஐ. பி. அறையில் ஒரு வயதான அம்மாள் தம் குடும்பத்தோடு அமர்ந்து அந்த விமானத்தின் வருகையை வெகு ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். மலேசியாவில் வெற்றி வாகை சூடிய உலக ஹாக்கி வீரர்களில் தமிழகத்தின் பெருமையை உயர்த்திய திரு பிலிப்ஸின் அன்னை அவர்.

"என் பிள்ளை வெற்றியோடு வர்றதைப் பார்த்து மகிழக் குடும்பத்தோடு வந்திருக்கேன்! இதோ பிலிப்ஸின் மனைவி தெரஸா. எனக்கு ஏழு பிள்ளைகளும் ஒரு பெண்ணும்!" என்று பூரிப்புடன் சொல்லிக் கொண்டே போகிறான் எலிஸபெத் அன்னை. பிலிப்ஸ் சென்ட்ரல் ஸ்டேஷனில் பிரதம டிக்கெட் பரிசோதகர்.

"நாங்க வீட்டிலே ரேடியோ காமெண்ட்ரியிலே வெற்றிச் செய்தியைக் கேட்டோம். என் கணவர் அயல் நாடுகளுக்குச் சென்றது இது நாலாவது தடவை! என் மகனுக்கு ஆறு வயது. பரங்கிமலை பீட்டர் பள்ளியில் முதல் வகுப்புப் படிக்கிறான்" என்று வெற்றிப் பெருமகனின் திருமகனை அறிமுகப்படுத்துகிறாள் தெரஸா.

"இந்தியக் கோஷ்டி ஆட்டக்காரர்கள் சிங்கப்பூரில் எத்தனையோ தேச ஆட்டக்காரர்களைச் சமாளித்திருக்கிறார்கள். ஆனால் இங்கே இரண்டு மணி நேரமாக அவர்கள் 'கஸ்டம்' இலாகாவினரிடம் மாட்டிக் கொண்டு வெளியேற முடியாமல் தவிக்கிறார்களே!" என்று நீண்ட நேரம் வரவேற்பு மாலைகளை ஏந்தி நின்று அலுத்த ஹாக்கி ரசிகர்கள் முணுமுணுத்தார்கள்.

உலகக் கோப்பைப் பந்தயத்தில் ஹாக்கி ஆட்டக்காரர்களின் திறமை பளிச்சிடுவதை நேரில் கண்டு மனமுருகி நின்றவர் இந்திய ஹாக்கி பெடரேஷன் தலைவர் திரு எம். ஏ. எம். ராமசாமி.

"மலேசியாவில் நடந்த ஹாக்கிப் பந்தயங்களை நேரில் பார்த்த தங்களிடமிருந்து விவரங்களைத் தெரிந்து கொள்ளலாமா?"

"மலேசியத் தலைநகர் கோலாலம்பூரில் நாலைந்து மைதானங்களில் உலக ஹாக்கிப் பந்தயங்கள் நடைபெற்றன. நம் சென்னையைப் போலவே கோலாலம்பூரும் உஷ்ணப் பிரதேசம்தான். ஐரோப்பிய ஆட்டக்காரர்களுக்கு ஒருசிறிது கஷ்டமாக இருந்திருக்கலாம். ஹாக்கிப் பந்தயங்களின்போது இரண்டு மணி நேரம் கொட்டு கொட்டு என்று மழை கொட்டி விட்டது. ஆட்டக்காரர்களும்,

பார்வையாளர்களும் நனைந்து போனார்கள். ஆனால் இந்திர ஜாலமோ மகேந்திர ஜாலமோ என்னும்படி சிறிது நேரத்திலேயே மழை பெய்த சுவடு தெரியாமல் போய் விட்டது'' என்றார் திரு எம். ஏ. எம்.

''உங்களுக்கு உலக ஹாக்கிப் பந்தயங்களில் எந்தப் பந்தயம் 'திரில்'லிங்காக இருந்தது?''

'' இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையில் நடைபெற்ற பந்தயத்தையே 'திரில் லிங்' பந்தயமாகக் கருதுகிறேன். நமது இந்திய ஹாக்கி அணியில் காப்டன் அஜித்பால், அஸ்லம், பிலிப்ஸ் ஆகியோர் வெகு நன்றாக ஆடினார்கள். நம் இந்திய ஹாக்கி கோஷ்டி யிடம் நல்ல திறமை இருக்கிறது. ஹாக்கி நிர்வாகிகள் அவர்களைத் தொந்தரவு படுத் தாமல் இருந்தால் நிச்சயம் சுடர் விட்டுப் பிரகாசிப்பார்கள் என்பது உலகக் கோப்பைப் பந்தயத்தில் நிரூபணமாயிற்று. இந்தியக் கோஷ்டிக்கு 'ஸ்டாமினா' குறைவு என்பது அபத்தம். அவர்கள் தொடர்ந்து மூன்று ஹாக்கி மாட்சுகளை ஆடிச் சமாளித்திருக் கிறார்களே!''

''எந்தத் தேச ஆட்டக்காரர்களிடம் நிபு ணத்துவம் மிகுந்திருந்தது?''

''ஐரோப்பிய ஆட்டக்காரர்களிடம் ஹாக்கி நிபுணத்துவம் மிகுந்திருந்தது. கானா ஆட்டக் காரர்களிடம் ஒரு தனித் தன்மையைக் கண் டேன். ஏழு கோல் தோல்வியில் ஆடிக் கொண்டிருந்த கானா ஆட்டக்காரர்களுக்கு அந்தத் தேசத் தலைவர் கடைசி இரண்டு நிமிஷங்களிலும் குரல் கொடுத்து உற்சாகப் படுத்தியது புதுமை. இந்த உலக ஹாக்கிப் பந்தயத்திலே கானா தேசத்துக்குத்தான் நியாய உணர்வுடன் கூடிய ஆட்டத்துக்காகக் கோப்பை கிட்டியது!'' என்று விவரித்தார் திரு எம். ஏ. எம்.



மாஜிஸ்டிரேட் (கைதியைப் பார்த்து): நானும் உன்னைச் சென்ற பத்து ஆண்டுகளாக இதே கோர்ட்டில் பார்த்துக் கொண்டிருக்கிறேனே!

கைதி: உங்களுக்குப் பெரிய உத்தியோகம் கிடைத்து மாற்றலாகிப் போகலேன்னா நான் என்னங்க செய்யறது?

எஸ். என். ராஜாராம்
ஆதாரம்: கோர்ட் உலகம்

---

உலகக் கோப்பைக்கான ஹாக்கிப் பந்தயம் முதன் முதலில் 1971ம் வருஷம் பார்ஸிலோனாவில் நடைபெற்றது. இந்தியா இந்தப் பந்தயத்தில் மூன்றாவது இடம் பெற்றது. இரண்டாவது உலக கோப்பைப் பந்தயம் 1973ம் ஆண்டில் ஆம்ஸ்டர்டாமில் நடைபெற்று, அதை நடத்திய ஹாலந்துக்கே உலகக் கோப்பை சென்றது. இந்த இரண்டாவது உலகப் போட்டியில் இந்தியாவுக்கு இரண்டாவது இடம். மூன்றாவது உலகக் கோப்பைப் பந்தயம் மலேசியாவின் தலைநகரான, கோலாலம்பூரில் நடைபெற்றது. இந்தியா முதல் இடத்தை, உலக சாம்பியன் பதவியை நிலைநிறுத்திக் கொண்டது! ஹாக்கி பெடரேஷனின் பொன் விழா ஆண்டில் இந்தியக் கோஷ்டியின் பொன்னான வெற்றி இந்தியா வைத் தலைநிமிர்ந்து நிற்க வைத்திருக்கிறது.

இந்தியக் கோஷ்டியின் காப்டன் அஜித் பாலும், கோவிந்தாவும் பிரம்மசாரிகள். ஜெயலட்சுமியின் பார்வை கிட்டியவர்களுக்குக் கிருக லட்சுமிகளும் விரைவில் கிட்ட வாழ்த்துவோம்! — குண்டுமணி

# மூன்றாவது போட்டியில் முதல் இடம்!



○ வெற்றி வீரர்கள், இந்திய ஹாக்கி ஃபெடரேஷன் தலைவர் திரு எம். ஏ. எம். ராமசாமியுடன் மீனம்பாக்கம்-விமான நிலையத்தில்.



# "ஆயிரத்தில் ஒருத்தி"

கே. ஆர். விஜயாதான் "ஆயிரத்தில் ஒருத்தி". நடிப்பிலும் அப்படித்தான். எந்தக் கட்டத்திலும் சிறிதும் இளைத்துவிடாத நடிப்பு? ஆனால் சரீரம் இளைக்கத்தானே வேண்டும்? அலட்சியப்படுத்தலாமா?

மரண தண்டனை விதிக்கப்பட்ட கைதியாக வந்து தம் அருமையான முகபாவங்களாலேயே நம் மனத்தில் இடம் பெற்றுவிடுகிறார் கே. ஆர். விஜயா. விதிக்கப்பட்ட தூக்குத் தண்டனை வக்கீல் லக்ஷ்மியின் சாமர்த்தியமான வாதத்தினால் தவிர்க்கப்படுகிறது. பயங்கரக் கொலைக் குற்றவாளி என்ற இழிபெயரிலிருந்து குடும்ப விளக்காக மாறும் அற்புதமும் நிகழ்கிறது.

நல்ல கருத்தும், சஸ்பென்ஸும் உள்ள கதை படத்துக்குக் கடைசி வரையில் சுவை கூட்டியிருக்கிறது. ஜகதீசனின் கதை. வசனமும் அவரே எழுதியிருக்கிறார்.

வக்கீல் லக்ஷ்மியாக வரும் சுஜாதா இப்படத்தில் ஒரு தொடர்கதையாகவில்லை — முற்றுப்பெறும் பாத்திரம்தான்! மிகவும் இயல்பாக நடித்திருக்கிறார். ஜெயசுதா, ஏ. சகுந்தலா இருவரும் 'நியூவேவ்' பாத்திரங்கள். முதலில் களிப்பில் மிதந்த இருவரும் பிற்பகுதியில் கண்ணீரில் மிதக்கின்றனர்.

முதலில் ஒழுக்கம் கெட்டவனாக வந்து பிறகு நல்லவனாக மாறும் பாலாஜி, வில்லன் மாதிரி வந்து ஆயிரத்தில் ஒருத்தியைக் கண் கலங்க வைக்கும் ஸ்ரீகாந்த் இருவரும் திரைக் கதைத் திருப்பங்களுக்கு உதவுகின்றனர்.

அவிநாசி மணி அருமையாகப் படத்தை டைரக்ட் செய்திருக்கிறார். இது அவரது முதல் படம், ஆனால் முதல்தரமான படம்!

சிரித்து மகிழ, உருகி நெகிழ ஒரு நல்ல படம் — "ஆயிரத்தில் ஒருத்தி."

# யாருக்கு மாப்பிள்ளை யாரோ?

தீவதிக் குளத்தில் விழுந்து தத்தளித்த ஜெய்சித்ராவைக் காப்பாற்றி, அவளால் ஒரு 'கான்சர்' நோயாளியாகக் கருதப்பட்டு, அதனால் முதலில் அவளது அனுதாபத்தையும், பிறகு கட்டாயக் காதலையும் பெற்றுச் சுலபமாகவே எதையும் சாதித்து விடுகிறார் ஜெய்சங்கர். 'டிஷ்யூம், டிஷ்யூம்' நிறைய இருக்கிறது. ஜெய்சங்கர் ஜமாய்க்கக் கேட்பானேன்? கதை ஜெய்சித்ராவின் நடிப்புக்கு ஒரு சவால். அவர் திறமையோடு சமாளித்திருக்கிறார்.

மனைவிக்குத் தாசனாக இருக்க ஸ்ரீகாந்துக்கு அரிய வாய்ப்பு. பரபரப்பும் சுறுசுறுப்பும் காட்டி நன்றாய் நடித்திருக்கிறார்.

'ஃபடாபட்' ஜயலக்ஷ்மி திமிர் பிடித்த பணக்காரப் பெண். திமிரைக் காட்டியதோடு நடிப்பையும் காட்டியிருந்தால் நன்றாயிருந்திருக்கும்.

பாபுவின் காமிராக் கோணங்கள் பாராட்டுப் பெறுகின்றன.

இந்த நகைச்சுவைப் படத்தின் கதை, வசனம் இரண்டையும் தீட்டியவர் தூயவன். டைரக்டர் எஸ். பி. முத்துராமன் சிறிதும் குழப்பமில்லாமல் திரைப் படத்தை இயக்கியிருக்கிறார்.

உமா சித்ராவின் "யாருக்கு மாப்பிள்ளை யாரோ?" படத்தைப் பார்த்து முழுவதும் ரசிப்பது யாரோ? -காந்தன்



**பொன்னியின் புதல்வர்**

**சுந்தா**



## 35. மீண்டும் சென்னை

**துன்பம் பகிர்ந்திடக் குறுகும்:**
**இன்பமோ பெருகும்.**

*1931ம் ஆண்டின் தொடக்கத்தில் விடுதலையான ராஜாஜி, அதுவரை சிறை புகாமலிருந்த ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்திக்குத் தைரியம் சொல்லி வற்புறுத்தி அவரைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போய்ச் சட்ட மறுப்புச் செய்தார். இருவருமாகச் சிறை சென்று சில நாட்கள் இருந்து, விரைவிலேயே காந்தி — இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டபடியால் வெளியே வந்தார்கள்.*

*காந்தி — இர்வின் ஒப்பந்தம் அமுலில் இருந்த 1931ஆம் வருஷத்தில் ராஜாஜி தமிழ் நாடெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்து தேசியப் பிரசாரமும் மதுவிலக்குப் பிரசாரமும் நடத்திய முறை சரித்திரத்தில் எழுத வேண்டியது.*

("நாட்டுக்கு ஒரு புதல்வர்" நூலில் கல்கி)

அந்தச் சுற்றுப் பிரயாணத்தில் கலந்து கொள்வதற்குத் தக்க சமயத்தில், திருச்செங்கோட்டுக்குக் கல்கி மனைவியுடன் வந்து, பழைய குடிசையில் புதுக் குடித்தனம் போட்டுக் கொண்டார். வந்துசேர்ந்ததுமே அவர், ராஜாஜியின் பிரசுரமாகப் பிரசாரப் புத்தகம் ஒன்றை எழுதி வெளியிட்டு நெடுகிலும் விநியோகத்துக்கு அனுப்பினார். அதில், ''நமது கடமை'' என்ற பகுதியைப் பார்ப்போம்:

*மகாத்மா காந்தி முதலிய நமது அரும் பெரும் தலைவர்களும், ஸ்ரீமதிகள் சரோஜினி தேவி, ருக்மிணி லக்ஷ்மிபதி, பிச்சமுத்தம்மை, கமலாதேவி முதலிய பெண்மணிகளும் பிரிட்டிஷ் சர்க்காரின் சிறைக் கூடங்களிலே கிடந்து துன்புற்றார்கள். இன்னும் ஆயிரக் கணக்கான தொண்டர்கள் சிறை புகுந்தும், அடிபட்டும், மற்றப் போலீஸ் கொடுமைகளுக்கு உள்ளாகியும் எத்தனையோ கஷ்ட நஷ்டங்களை அனுபவித்து வந்தார்கள். ஏன் இவர்கள் எல்லாம் இப்படித் துன்பங்களை அனுபவிக்க வேண்டும்? பாரத மக்கள் அனைவரும் அடிமைத்தனம் நீங்கி, சுதந்திரம் பெற்று, வறுமை ஒழிந்து உடுக்க உடையும், உண்ண உணவும் அடைந்து சுகமாக வாழ வேண்டும் என்றே அல்லவா? இந்தத் தேசபக்த வீரர்கள் — வீரப் பெண்கள் முதலியோரின் அரிய தியாகங்களுக்கு நாம் பாத்திரர்களாக வேண்டாமா?*

அப்படி மக்களைப் பாத்திரர்களாய் ஆக்குவதற்காக ராஜாஜி செய்த பிரசாரப் பயணங்களில், அவருடைய காரியதரிசியாகக் கல்கி பணியாற்றினார். ஆச்சாரியாருடன் நெடுகிலும் வழி நடக்க வேண்டும் என்று அவர் கொண்ட ஆசை, அப்போது ஓரளவு நிறைவேறியது.

நாலைந்து மாதம் பிரயாணம் செய்த பிறகு, வேடிக்கையான சம்பவம் ஒன்று நிகழ்ந்தது:

*ராஜாஜியிடம் நான் காரியதரிசி வேலை பார்த்த நாளில் சில சமயம் அவருடன் ரயில் பிரயாணம் செய்ய வேண்டியிருக்கும். அப்போது ஒரு நாள் நடந்த ரசமான சம்பவம் என்னுடைய வாழ்க்கையையே மாற்றி அமைத்து விட்டது என்று துணிந்து சொல்லலாம்.*

*ரயில் 'லொடக்' என்று இரண்டு ஆட்டம் ஆடி நின்றதும் தூங்கிக் கொண்டிருந்தவன் தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு எழுந்திருந்தேன். நாங்கள் இறங்க வேண்டிய சங்கரி துர்க்கம் ஸ்டேஷன் வந்திருந்தது. ராஜாஜியும் அப்போதுதான் எழுந்து தமது படுக்கையைச் சுற்ற ஆரம்பித்திருந்தார். அதைப் பார்த்து நானும் என் படுக்கையைச் சுருட்ட ஆரம்பித்தேன். அதைக் கட்டுவதற்கு ஒரு கயிறு வைத்திருந்தேன். படுக்கையைச் சுருட்டி அதனடியில் கயிற்றை விட முயன்றபோது படுக்கை முழுதும் அவிழ்ந்து விழுந்தது! பிறகு படுக்கைக்கும் எனக்கும் ஒரு பெரிய மல்யுத்தம் ஆரம்பித்தது. தலைகாணியை உள்ளே திணித்தால், ஜமக்காளம் வெளியே வந்து விழுகிறது. அதைத் திணித்து விட்டுப் பார்த்தால், துப்பட்டி எப்படியோ வெளியில் வந்து கிடக்கிறது. எல்லாவற்றையும் மறுபடியும் வைத்துச் சுருட்டிவிட்டுப் பார்த்தால் கயிற்றைக் காணவே காணோம்! துப்பட்டி கயிற்றையும் சேர்த்து அழைத்துக் கொண்டு படுக்கைக்குள் போய் விட்டது!*

துப்பட்டி மறுபடியும் வெளியில் வராமல், கயிற்றை மட்டும் எடுப்பதற்குள் எனக்கு மூச்சு வாங்கிப் போய்விட்டது!

மறுபடியும் படுக்கை கட்டத் தொடங்கினேன். ஒரு வார்த்தையில் சொல்கிறேனே! அவசரத்திலே நம்மைக் காலை விடுவதற்குப் படுக்கையையும் கயிற்றையும் போன்ற வஞ்சகத் துரோக வஸ்துக்கள் ஒன்றுமே இல்லை! என்ன வெல்லாமோ செய்து பார்க்கிறேன், படுக்கையை அந்தக் கயிறு கட்டவே மாட்டேன் என்கிறது.









● 'டாக்டர் ரங்காச்சாரியின் பெயரைச் சொன்னால், போன உயிர் கூடத் திரும்பிவந்துவிடும் என்னும் நம்பிக்கை பரவியிருந்தது!' (படம்: ராஜம் கிருஷ்ணன் எழுதிய நூலிலிருந்து.)

● "வாஸனே திருச்செங்கோட்டுக்கு வந்து கல்கியை அனுப்பித் தரும்படி கேட்டார். கல்கியை அவரிடம் ஒப்படைத்தேன். இருவரும் பயணமடைந்தார்கள்." (படம்: ஜெமினி.)

● "என்னவெல்லாமோ செய்து பார்க்கிறேன். படுக்கையை அந்தக் கயிறு கட்டவே மாட்டேன் என்கிறது!"

● ஆனந்த வசந்த சாந்த குமாரி!

இதற்குள்ளே கார்டு விசில் அடித்துவிட்டான். ராஜாஜி தமது படுக்கையைக் கட்டி அதையும் மற்ற சாமான்களையும் கீழே இறக்கிவிட்டு என்னைப் பார்த்தார். மளமளவென்று வந்து என் கையிலிருந்த கயிற்றைப் பிடுங்கிக் கொண்டு அதை ஒரு வாங்கு வாங்கி ஓர் இழுப்பு இழுத்து, படுக்கையைக் கட்டி முடிச்சுப் போட்டார். அப்புறம் கூட அதை என் வசத்தில் ஒப்புவித்தால் என்ன விபத்து நேருமோ, என்னமோ என்று பயந்து தாமே தூக்கிக் கொண்டு போய், வெளியில் பிளாட்பாரத்தில் போட்டார்!

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தார்கள் ரயிலில் இருந்தவர்கள். எனக்கு மானம் போயே போய்விட்டது. கொஞ்ச நாளைக்கெல்லாம் என்னுடைய காரியதரிசி பதவியையே ராஜிநாமா செய்துவிட்டேன்! (ஆ. வி. 23-1-38)

இது வெறும் கயிறு அல்ல! உண்மையிலே நடந்த இந்த நிகழ்ச்சியை ராஜாஜி அடிக்கடி தமது நண்பர்களிடம் சொல்வதுண்டு. ஆனால், ராஜாஜியை விட்டுக் கல்கி விலகியதற்கு அந்தக் கயிறு, அதாவது கயிற்றைக் கட்டத் தெரியாத கையாலாகாத்தனம் காரணம் அல்ல. சென்னையிலிருந்து, எஸ். எஸ். வாசன், ஆனந்த விகடனுக்கு வந்துவிடும்படி கயிறு போட்டுக் கொண்டே இருந்தார். அந்தக் கயிற்றின் இழுப்புக்கும் ராஜாஜியின் அன்புத் தளைக்கும் இடையே, தர்மசங்கடமான நிலையில் கல்கி இருக்கையில், வாசன் திருச்செங்கோட்டுக்கு வந்து அவரை விடுவிக்கும்படி ஆச்சாரியாரை வேண்டிக் கொண்டார். அதற்கு அவரும் இணங்கினார். (அந்த ரயில் பிரயாணம் முடிந்ததும் கல்கி விலகிக் கொண்டார்.)

இதைப் பற்றி எங்கேயும் கல்கி எழுதியோ

பேசியோ இருக்கவில்லை என்றாலும், வெவ்வேறு சமயங்களில், வாசன் எழுதியதும் ராஜாஜி பேசியதும் உண்டு: அவற்றை அடுத்தடுத்துப் பார்ப்போம்:

...சில மாதங்களில் ''ஆனந்தவிகடன்'' ஆசிரியராகவே ஆக்கிக் கொண்டேன். அப்பொழுது அவர் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் ராஜாஜிக்குத் துணையாயிருந்தார். ராஜாஜி இதற்கு அனுமதி கொடுத்தார். சிறந்த எழுத்தாளர் ஒருவர் தமிழ் நாட்டுக்குக் கிடைத்தார் என்று அவரை ஆசிரியராய் அமைத்த விஷயத்தில் ஆனந்தம் அடைந்தேன். (ஆ. வி. 8-9-'63)

...வாஸனே திருச்செங்கோட்டுக்கு வந்து கல்கியை அனுப்பித் தரும்படி கேட்டார். ''அவர் வந்தால் தாராளமாக அழைத்துச் செல்லுங்கள்'' என்று நான் சொன்னேன். ''உங்கள் வேலையில் அவர் ஈடுபட்டிருக்கையில் நானும் அவரை அழைத்துச் செல்ல மாட்டேன்; அவரும் வரமாட்டார்'' என்று அவர் சொன்னார். கல்கியை அவரிடம் ஒப்படைத்தேன். இருவரும் பயன் அடைந்தனர். வாஸனுக்குக் கல்கி மாதிரி ஓர் ஆசிரியர் கிடைத்திருக்க மாட்டார். கல்கிக்கும் வாஸன் மாதிரி ஒருவர் கிடைத்திருக்க மாட்டார்.

(17-12-'54ல் ராஜாஜி மண்டபத்தில் பேசியது-ஈழகேசரி 26-12-'54)

கல்கியின் எழுத்துத் திறமையையும் எழுத்துத் துறையில் அவருக்கு இருந்த ஆசையையும் அதற்குள் கண்டுகொண்டிருந்த ராஜாஜி, தமக்கு உதவியாய் இருக்கிறார் என்ற காரணத்தால் அவரைத் தம்முடன் கட்டிப் போட்டிருப்பது நியாயமல்ல என்பதை உணர்ந்திருப்பார். கல்கி ஆனந்தவிகடனில் சேருவதால், விடுதலை இயக்கம், காங்கிரஸின் குறிக்கோள்கள், தமக்கு விருப்பமான தீண்டாமை விலக்கு, மதுவிலக்கு ஆகியவற்றுக்கு நல்ல பிரசாரம் கிடைக்கும் என்பதையும் அவர் உணர்ந்திருப்பார். ஏற்கனவே பத்தாயிரம் பிரதிகளுக்கு மேல் விற்கும் அந்தப் பத்திரிகை மேலும் வளர்ந்து, வகையான பிரசார சாதனமாய் அமையும். இவற்றை எல்லாம் கருதி மிக்க மகிழ்ச்சியுடனேயே ராஜாஜி கல்கியை ஆனந்த விகடனுக்குப் போகச் சொல்லி இருப்பார்.

1931 இறுதியில் ஆசிரமத்தைவிட்டுக் கல்கி புறப்பட்டார். ஆசிரமவாசிகள் அனைவரும் ராஜாஜியின் தலைமையில் கூடி, கல்கி தம்பதியருக்கு நல்வாழ்த்துக் கூறி அவர்களை வழியனுப்பி வைத்தார்கள்.

அப்போது மனைவி ஐந்து மாதக் கர்ப்பிணியாய் இருந்ததால், அவளைக் கல்கி பிறந்தகத்தில் கொண்டு போய் விட்டு விட்டு, சென்னைக்குச் சென்று, ஆனந்தவிகடனின் துணையாசிரியராய், நடைமுறையில் மெய்யாசிரியராய், அமர்ந்தார். அவர் வருவதற்காகவே காத்திருந்த வாசன், 1932 தொடக்கத்திலிருந்து தமது பத்திரிகையை மாதம் இரு முறை இதழாகக் கொண்டு வரச் செய்தார். துமிலனின் துணையுடன் கல்கி, முழு ஊக்கத்துடன் பத்திரிகை வேலையில் ஈடுபட்டார். ஆனந்த விகடன் என்ற பெயருக்கு ஏற்ப, அட்டைப் படம், தலையங்கம், கதைகள், கட்டுரைகள், விமரிசனங்கள் முதலிய எல்லாவற்றையும் விகடமயமாய் ஆக்குவதென இருவரும் திட்டமிட்டு அதை ஈடேற்றுவதில் முனைந்தார்கள்.

இன்னொரு பக்கத்தில் வாசன், புதுப் புதுப் போட்டிகளை வெளியிட்டார்; அவற்றின் பரிசுத் தொகைகளை அதிகமாக்கினார். பத்திரிகையின் விற்பனையைப் பெருக்குவதற்கும், அதன் மூலம் தம் வருவாயைப் பெருக்கிக் கொள்வதற்கும் நூதன உபாயங்களைச் செய்து கொண்டும் யோசித்துக் கொண்டும் இருந்தார்.

அவர்கள் இப்படி உற்சாகமாய் வேலை செய்து கொண்டிருக்கையில் நாட்டின் அரசியல் நிலைமை மோசமாகிக் கொண்டிருந்தது.

மகாத்மா காந்தி காங்கிரஸின் ஏகப் பிரதிநிதியாக லண்டனில் நடந்த வட்டமேஜை மகாநாட்டுக்குச் சென்று ஏமாற்றமடைந்து திரும்பி வந்தார். அவர் வருவதற்குள்ளேயே காந்தி—இர்வின் உடன்படிக்கையைத் தகர்த்து விட பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் தீர்மானித்திருந்தது. அதற்குத் தகுந்தாற்போல் லார்ட் வில்லிங்டன் புது வைஸ்ராயாக வந்து சேர்ந்தார்.

மகாத்மா பம்பாயில் வந்து இறங்கிய ஒரு வாரத்துக்குள்ளே கைது செய்யப்பட்டார். எல்லா மாகாணத் தலைவர்களும் அவ்விதமே சிறைக்கு அனுப்பப்பட்டார்கள். ராஜாஜியும் நாலாவது தடவை சிறை சென்றார். மிகக் கொடுமையான அடக்கு முறை தேசமெங்கும் தாண்டவம் ஆடிற்று. தேசமும் தேசிய இயக்கமும் உயிரிழந்தவை போல் ஸ்தம்பித்து நின்றன.

(கல்கியின் ''நாட்டுக்கு ஒரு புதல்வர்'' நூல்)

இவ்வித அரசியல் நிலைமையால் உண்டான சோர்வு, ராஜாஜியின் சிறைவாசத்தால் தோன்றிய வருத்தம், பத்திரிகையின் பொறுப்புக்கள் — இவற்றி

னிடையே கல்கி இருக்கையில், புத்தமங்கலத்திலிருந்து கடிதத்துக்கு மேல் கடிதமாக வந்து கொண்டிருந்தது—சீமந்தம் நடத்த வேண்டும் என்பதாக. முன்பு தாயாரின் வற்புறுத்தலால் பிராயச்சித்தம் செய்து கொள்ள இணங்கியது போல், இப்போதும் அவரைத் திருப்தி செய்வதற்காக அதற்குச் சம்மதிக்க வேண்டியதாயிற்று. அவருக்கு அதில் வெறுப்பு இல்லை என்றாலும், ராஜாஜியும் மற்ற தலைவர்களும் சிறையில் இருக்கையில், என்ன கொண்டாட்டம் வேண்டி இருக்கிறது என்று எண்ணினார். அவருடைய கண்டிப்பான நிபந்தனைகளின்படி, மேள தாளம், கண்ணாடி வளையல்கள், அந்நியத் துணிகள் ஏதுமின்றியும், மிக எளிய முறையிலும் சீமந்தம் நடந்தது.

விசேஷம் எல்லாம் முடிந்ததும் ருக்மிணி, ராஜாஜியிடமிருந்து தனக்கு ஜனவரி மாதத்தில் வந்திருந்த கடிதம் ஒன்றைக் கணவரிடம் காட்டினாள்.

காந்தி ஆசிரமம், திருச்செங்கோடு
7—1—32

எப்போதும் தைரியமாயும் சுவாமியை நம்பியுமிருந்தால் ஒருவிதக் கஷ்டமும் விசனமும் இராது. லக்ஷ்மியையும் உங்கள் எல்லாரையும் மறுபடியும் பார்க்கும் வரையில் உடம்பில் எவ்வித வியாதியும் இல்லாமல் ஆரோக்கியமாயிருக்குமாறு கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டிருப்பேன். நாட்டின் மானத்துக்காக நாம் பாடுபடுகிறோம். அதில் ஸ்திரீகள் படும் கஷ்டமும் ஒரு பங்கு. கிருஷ்ணமூர்த்தியை நான் பார்ப்பேனோ என்னவோ தெரியவில்லை. அதற்கு முன்னமே என்னைப் பிடிப்பார்கள் என்று எண்ணுகிறேன். அவருக்கு என்னுடைய அன்பைச் சொல்லவும். அவருடைய உடம்பைச் சரியாய்ப் பார்த்துக் கொள்ளச் சொல்லவும்.

''அண்ணா இப்படியெல்லாம் நமக்கு எழுதுவது நாம் செய்த பாக்கியம்'' என்றார் கிருஷ்ணமூர்த்தி.

கிராமத்தில் சரியான மருத்துவ வசதி கிடையாதாகையால், பிரசவத்துக்குச் சென்னைக்கே வந்துவிடுமாறு மனைவியிடம் கல்கி சொல்லிவிட்டுப் பயணமானார்.

அதன்படியே சில வாரங்களுக்குப் பிறகு தாயாரின் துணையுடன் சென்னைக்கு வந்தாள் ருக்மிணி. கல்கி தயாராய் வீடு பார்த்து வைத்திராததால், தங்கசாலைத் தெருவில் துமிலன் குடியிருந்த வீட்டின் ஒரு பகுதியில் வசிப்பதென்று ஏற்பாடாயிற்று.

தண்டையார்ப்பேட்டை ரேணி ஆஸ்பத்திரியில் பிரசவம் நிகழ்ந்து பிள்ளைக் குழந்தை பிறந்தது. அந்தச் செய்தியைக் கிருஷ்ணமூர்த்தி தம் ஊருக்கும் தலையூருக்கும் தந்தி மூலம் அறிவித்தார்; வேலூர் சிறையிலிருந்த ராஜாஜிக்குக் கடிதம் மூலம் தெரிவித்தார்.

நாலைந்து நாட்களில் ஆச்சாரியாரிடமிருந்து பதில் கடிதம் வந்தது. அரைக்கால் தாளில் நாலு பக்கங்கள்; அவற்றில் மூன்று பக்கங்கள் ஆங்கிலத்தில் கிருஷ்ணமூர்த்திக்கு; ஒரு பக்கம் தமிழில் ருக்மிணிக்கு.

மத்திய சிறைச்சாலை, வேலூர்
26—5—32

பிரியத்துக்கு உரிய கிருஷ்ணமூர்த்தி,

எவ்வளவு சந்தோஷமான செய்தியை உங்கள் கடிதம் கொண்டு வந்தது! இத்தனை நாள் காத்திருந்த பிறகு கிடைத்த உங்கள் கடிதம் நல்ல பரிகாரம் செய்து விட்டது. ரொம்ப நல்ல சங்கதி! ருக்மிணிக்கு என் அன்பான பாராட்டுக்கள்; பிறந்துள்ள செல்வனுக்கு ஒரு தாத்தாவின் ஆசீர்வாதம். சீரும் சிறப்புமாய் அவன் வாழ்வானாக.

ஏதோ பெற்றுப் பிழைத்தாள் என்பதைத் தவிர வேறு எந்த உணர்ச்சியும் இல்லையே என்று நீங்கள் ஆச்சரியப்படுகிறீர்கள். சாதாரணமாய் இப்படித்தான் யாருக்கும் தோன்றும். அபாயத்திலிருந்து மனைவி விடுபட்டாள் என்பது ஒன்றைத்தான் எந்தக் கணவனும் முதலில் நினைப்பான். போகப் போகத்தான் குழந்தையிடம் பாசம் உண்டாகி வளரும். மனையாளிடம் உள்ள பிரியம் இரு மடங்காய்ப் பெருகும்; அவனுடைய பிரியமும் அப்படியே.

---

அன்பான பெண்கள் நிறையப் பேர் உண்டு. ஆனால் உண்மையானவர் ஒருவரும் இல்லை.

— விக்டர் ஹூகோ



அன்பு ஓர் அற்புத சக்தி. அதற்கு ஈடு வேறே கிடையாது. எல்லாவற்றிலும் அதுவே இனிமையானது. மகத்தானது. அது ஒன்று தான் உலகத்திலே நிலையானது.

குழந்தை மேலே ரொம்ப ஆசை வேண்டியதுதான்; அதை அக்கறையாய் வளர்க்க வேண்டியதுதான். ஆனாலும் கவலைப்பட்டு மன நிம்மதியை இழக்கக் கூடாது.

எந்தப் புதனோ வியாழனோ, உங்கள் சௌகரியம் போல் என்னைப் பார்க்க வரலாம். நீங்கள் வருவதால் வேறு யாருடைய உரிமையும் தடைப்பட்டு விடாது. அப்படி யாரும் என்னைப் பார்க்க வரப் போவதாகவும் தெரியவில்லை. — வி. ஆர்.

சௌ. ருக்மிணிக்கு அண்ணாவுடைய ஆசீர்வாதம்.

நீ சுகமாகக் குழந்தை பெற்ற பாக்கியம் அடைந்ததை அறிந்து அளவற்ற மகிழ்ச்சியடைந்தேன். லக்ஷ்மியும் வெகு சந்தோஷத்துடன் எழுதியிருக்கிறாள்.

குழந்தைக்குத் தாய்ப்பால்தான் ரொம்ப நல்ல ஆகாரம். நீ சரியாய்ப் பால், வெண்ணெய் சாப்பிட்டு ஆரோக்கியமாக உடம்பை வைத்துக் கொண்டு குழந்தையைச் சரியாய்ப் பார்த்து வருவாய். கிருஷ்ணமூர்த்தியிடம் இரு மடங்கு அன்பு வளரும்.

நான் சவுக்கியமாக இருக்கிறேன்.—அண்ணா

பிறக்கும்போது ஆறு மாதக் குழந்தை போல் அவ்வளவு பெரியதாய் இருந்த சிசு, ஆஸ்பத்திரியில் போதிய கவனிப்பு இல்லாத காரணத்தாலோ என்னவோ, காணக் காண இளைத்துப் போயிற்று. காய்ச்சல் வந்து வாட்டிற்று. வெளியே தனி வைத்தியர்களைக் கொண்டு குணப்படுத்திக் கொள்ளலாம் என்று கிருஷ்ணமூர்த்தி எண்ணி, தாயையும் குழந்தையையும் வீட்டுக்குக் கூட்டிச் சென்றார். கொஞ்சம் தேவலை என்று தோன்றிய சமயத்தில், திடீரென்று ஒரு நாள் இரவு குழந்தைக்கு இழுப்பு வந்துவிட்டது. என்ன செய்வதென்று தெரியாமல் கிருஷ்ணமூர்த்தி தவித்தார். துமிலன் வாசனிடம் சொல்ல, இருவரும் விரைந்தோடிப் போய் நள்ளிரவில் டாக்டர் ரங்கச்சாரியாரைக் கூட்டி வந்தார்கள். அந்த டாக்டர் கண்ணால் பார்த்துக் கையால் தொட்டாலே போதும், எந்த வியாதியும் குணமாகிவிடும் என்று சென்னை மக்கள் நினைத்தார்கள். கல்கியே பின்னர் எழுதியதுபோல், டாக்டர் ரங்காச்சாரியின் பெயரைச் சொன்னால் போன உயிர்கூடத் திரும்பி வந்துவிடும் என்ற நம்பிக்கை பரவியிருந்தது. அப்படிப்பட்டவர் அக்கறையுடன் கவனித்து மருந்து கொடுத்தும் குழந்தை பிழைக்கவில்லை.

அந்தத் துக்கச் செய்தியை அறிந்ததும், ருக்மிணி அம்மாளுக்கு ஆறுதல் சொல்லி ராஜாஜி கடிதம் எழுதினார் :

மத்திய சிறைச்சாலை, வேலூர்
4—6—32

உனக்கு ஏற்பட்ட துக்கத்தைப் பற்றிச் சங்கதி அறிந்தேன். ஸ்திரீகளுக்குப் பகவான் வைத்திருக்கும் துக்கங்களுக்குக் கணக்கே இல்லை. ஆனால் நீயும் இம்மாதிரி விசனம் அனுபவிக்க வேண்டியதாயிற்றென்று நினைக்க வருத்தமாய்த்தான் இருக்கிறது. என்ன ஆறுதல் சொல்ல முடியும்? நடந்து போனதைக் கூடியமட்டில் ஞாபகப்படுத்திக் கொள்ளாமல் வேறு காரியங்களில் மனத்தைச் செலுத்தி வருவது நல்லது.

சுகம், சந்தோஷம் — இவைகளுக்கு நமக்குள்ள பாத்தியம் என்ன? எத்தனையோபேர்களுக்கு எத்தனையோ துக்கங்கள் வந்து அனுபவிக்கிறார்கள். ''பகவான் கொடுத்தான்; பகவான் கொண்டு போனான்'' என்று பாட்டிகள் சொல்வது ரொம்ப உண்மை. இன்னும் சில நாள் கழித்து இந்தச் சம்பவத்தை மறக்கும்படி உனக்குப் பாக்கியம் கிடைக்கும்.

அவ்வளவு பெரிய மனிதர், சிறையில் வாடிக் கொண்டிருக்கும் நிலையிலும் தனக்கு ஆறுதல் சொல்லி அத்தனை அன்புடன் எழுதியதை ருக்மிணி படித்துப் படித்துக் கண்ணீர் உகுத்தாள். அந்தக் கண்ணீரே அவளுக்குக் கொஞ்சம் ஆறுதல் அளித்தது. ஆயினும், என்ன ஆறுதல் அடைந்து மனத்தைத் தேற்றிக் கொண்டாலும், அந்த வீட்டில் இருக்கிறவரை துக்க நினைவுகள் வந்து கொண்டேயிருக்கும், வீடு மாற வேண்டும் என்று அவள் எண்ணினாள்; கணவரும் அப்படியே எண்ணினார்.

அப்பர்சுவாமி கோயில் தெருவில் முன்பு அவர்கள் குடியிருந்த அதே வீட்டின் பகுதி, அப்போது தற்செயலாய்க் காலியாய் இருந்தது. அங்கே மாற்றலாகிப் போனார்கள். மறுபடியும் சனிக்கிழமை பஜனை, ஞாயிற்றுக்கிழமை கடற்கரை, மற்ற நாட்களில் டிராமில் அலுவலகத்துக்குப் போக்குவரத்து என்று தொடங்கி ஆறு மாதங்கள் ஓடின.

ஒரு நாள், அந்தத் தெருவுக்குப் பக்கத்தில் இருந்த குடிசைகளில் தீப்பற்றி வேகமாய்ப் பரவிக் கொண்டிருந்தது. ஒரே கூப்பாடும் இரைச்சலும் குழப்பமுமாய் இருந்தது. முக்கியமான சாமான்களை மட்டும் ஒரு பெட்டியில் வைத்துக் கொண்டு, வெளியேற ஆயத்தமாய் இருக்கும்படி மனைவியிடம் கல்கி

சொல்லிவிட்டு, தம்மால் ஏதேனும் செய்ய முடியுமா என்று பார்க்க வெளியே ஓடினார். அங்கே உண்டாகியிருந்த குழப்பத்தில் ஏதும் செய்ய முடியாது என்பதைக் கண்டார். எப்படியோ யாரோ சொல்லித் தீயணைக்கும் வண்டிகள் வந்து தீயை அணைத்தன.

ஓர் எழுத்தாளருக்கு எதுவும் எழுதுவதற்கு உரியது. அதுவும் அது போன்ற தீ விபத்து என்றால் கேட்பானேன்? ''கலாட்டா'' என்ற தலைப்புடன் கல்கி ஒரு கட்டுரை எழுதி வெளியிட்டார். தம் வீட்டுக்கு அருகே மூண்ட தீயைப் பற்றி அதில் விரிவாக வர்ணித்துவிட்டு, ''ஏதாவது விபத்துக்கள் நேரிடும்போதும், மற்றும் நெருக்கடியான சந்தர்ப்பங்களிலும், காரியம் எது செய்யவேண்டுமோ, அதை உடனே உணர்ந்து திறமையாகச் செய்கிறவர்கள் எங்கேயும் கொஞ்சம் அருமை ; நம் நாட்டிலோ அபூர்வம் என்றே சொல்லலாம்'' என்று முடித்தார்.

முன்பு குடியிருந்த வீட்டில், தம் குழந்தையின் உயிரைக் காப்பாற்ற வந்த டாக்டர் ரங்காச்சாரியைப் பற்றியும், பின்னொரு சமயம், ''பெரிய மனிதர்'' என்ற தலைப்புடன் ஒரு கட்டுரை எழுதினார். அதில், தமது குழந்தை சம்பந்தப்பட்ட விவரத்தையே, அந்த டாக்டருக்கு இருந்த நல்ல பெயரைக் கெடுக்காதபடி, மாற்றி எழுதினார் :

உயிரைக் காப்பதற்கு வைத்தியரைத் தேடுவது என்று ஏற்படும்போது, மிகவும் கெட்டிக்காரர் என்று பெயர் பெற்ற வைத்தியரையே எல்லோரும் தேடிப் போவது இயற்கையல்லவா? இவ்வாறு அவரைத் தேடிச் சென்ற பல்லாயிரக் கணக்கான ஜனங்களில் நானும் ஒருவன்...

ஒரு தடவை உயிர் நீங்கும் தறுவாயிலிருந்த ஒரு குழந்தையைப் பார்ப்பதற்காக டாக்டர் ரங்காச்சாரியை இரவு பத்தரை மணிக்கு டெலிபோனில் கூப்பிட்டோம். அவரை அப்போது அழைப்பது வீண் சிரமம் கொடுப்பதாகும் என்று மனத்திற்குள் தெரிந்தே இருந்தது. ஆனாலும் பாசம் கேட்கவில்லை. டெலிபோனில் விஷயத்தைச் சொன்னதும் ''மோட்டார் டிரைவர் வீட்டுக்குப் போய் விட்டான். வருவதற்கில்லை, வருத்தப்படுகிறேன்'' என்று பதில் வந்தது. டெலிபோனில் பேசியவர் கெட்டிக்காரர். ''கார் நாங்கள் அனுப்புகிறோம்'' என்றார். ''சரி'' என்று கூறி மேலே ஒரு வார்த்தையும் பேசாமல் டெலிபோனை வைத்து விட்டார் டாக்டர்.

மோட்டார் சென்று வீட்டு வாசலில் நின்ற அடுத்த விநாடியில் 'டக் டக்' என்று டாக்டர் நடந்து வந்து வண்டியில் ஏறிக்கொண்டதாக டிரைவர் கூறினான். அவனிடம் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லையாம்.

குழந்தையைப் பார்த்த பிறகு, ''சிகிச்சை ஒன்றும் வேண்டாம். குழந்தைக்குத் தாகம் அதிகமாக இருக்கிறது. ஜலம் நிறைய கொடுங்கள்'' என்று கூறித் தாமே ஒரு பாலாடையில் ஜலம் வாங்கிப் புகட்டினார். ''பார்த்தீர்களா? எவ்வளவு ஆவலாகக் குடிக்கிறது?'' என்று சொல்லிவிட்டு வெளிக் கிளம்பினார். மோட்டாரில் ஏறும்போது, ''உங்களைச் சிரமப்படுத்தினோம். மன்னிக்க வேண்டும்'' என்று கூறிக் கொண்டே பத்து ரூபாய் நோட்டு ஒன்று நீட்டப்பட்டது. கையை வீசியபடி ''வேண்டாம்; வேண்டாம், வந்தனம்!'' என்று சொல்லிவிட்டு வண்டியில் ஏறிக்கொண்டார்.

அந்த நேரத்தில் அவரை அழைத்துத் தொந்தரவு கொடுத்தது பற்றி எங்கள் எல்லோருக்கும் கொஞ்சம் மனச்சாட்சியின் தொந்தரவு ஏற்பட்டது. ஆயினும் ஓர் உயிரைக் காப்பாற்றுவதற்கு எவ்வளவு முயற்சி செய்யலாமோ அவ்வளவும் செய்தாகி விட்டது என்ற திருப்தி அடைந்தோம்.

(''ஏ! மாம்பழமே!'' என்ற கட்டுரைத் தொகுப்பிலிருந்து)

''நவசக்தி''யில் வேலை பார்த்த நாளிலிருந்தே கல்கியை ஜலதோஷம் தொல்லைப்படுத்தி வந்தது. அதற்கு நிவாரணம் தேடி அவர் எத்தனையோ வைத்தியர்களை அணுகியும் பலனில்லை. கடைசியில் டாக்டர் ரங்காச்சாரியிடம் சென்றார்.

பிரசித்தி பெற்ற என்னுடைய ஜலதோஷத்தைப் பார்க்கவில்லை என்ற அபகீர்த்தி டாக்டர் ரங்காச்சாரியாருக்கு ஏற்படக் கூடாது என்று ஒரு சமயம் தீர்மானித்து அவரிடம் சென்றேன். அதற்கு முன் பார்த்த பெரிய டாக்டர் ஒருவர், தொண்டை காது, மூக்கு ஆகிய மூன்றிலும் ஆபரேஷன் செய்ய வேண்டும் என்று சொல்லியிருந்தபடியால் டாக்டர் ரங்காச்சாரி குறைந்தது ஆறு ஆபரேஷனாவது அவசியம் என்று சொல்லுவார் என எதிர்பார்த்தேன். ஆனால் நடந்தது முற்றும் மாறானது.

''ஆ'' என்று வாயைத் திறக்கச் சொன்னார். உள்ளே பார்த்துவிட்டுத் ''தொண்டையில் ஒன்றும் இல்லை'' என்றார். காதைப் பிடித்துப் பார்த்தார். ''காதில் ஒன்றும் இல்லை'' என்றார். மூக்கை வெகு நிதானமாகப் பார்த்துவிட்டுக் கடைசியில் ''மூக்கிலும் ஒன்றும் இல்லை'' என்றார். எனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தைச் சொல்லி முடியாது. ''ஆபரேஷன் ஒன்றும் தேவையில்லை. நீர் என்ன ஜலத்தில் தினம் குளிக்கிறது?'' என்று கேட்டார். ''வெந்நீரில்'' என்றேன். ''குளிர்ந்த ஜலத்தில் குளித்துப் பழக்கம் செய்து கொள்ள வேண்டும். இரவில் கனமான போர்வைகளைப் போர்த்திக் கொள்ளக் கூடாது. நாளடை

வில் சரியாகப் போகலாம். சிகிச்சை ஒன்றும் வேண்டாம்'' என்று முடித்தார்.

அவர் பேச்சில் அப்போது எனக்குச் சிறிதும் நம்பிக்கை ஏற்படவில்லை. கடைசியாக, எத்தனேயோ டாக்டர்களின் ஆலோசனைகளுக்குள்ளே அவருடைய யோசனைதான் கிட்டத்தட்ட சரியானதென்று ஏற்பட்டது. (மேற்படி)

மயிலாப்பூரிலிருந்து மறுபடியும் மாம்பலத்துக்குக் குடி மாற்றம்; ஆனல் பழைய மாம்பலத்துக்குப் பதிலாகப் புதிய மாம்பலம். ராஜாஜியின் மூத்த குமாரர் கிருஷ்ணசுவாமி — ஹிந்து பத்திரிகையில் உதவி ஆசிரியராய்ச் சேர்ந்திருந்தவர் — ராமசாமித் தெருவில் பெரிய வீடு ஒன்றை எடுத்திருந்தார். அந்த வீட்டில், முப்பத்தைந்து ரூபாய் வாடகையுள்ள ஒரு பகுதியில் கல்கி தம்பதியர் வசித்தனர். அந்த வீட்டின் அதிகமான இட வசதியும் துணை வசதியும் அப்போது அவர்களுக்கு வேண்டியதாய் இருந்தன. ஏனெனில், ருக்மிணிக்கு இரண்டாவது பேறு காலம் நெருங்கிக் கொண்டிருந்தது. முந்திய அனுபவத்தின் காரணமாய், மருத்துவ மனையில் அல்லாமல் வீட்டிலேயே பிரசவத்தை வைத்துக் கொள்வதெனத் தீர்மானம் ஆகியிருந்தது. அப்போது அந்தப் பக்கத்தில் வசித்த டாக்டர் காந்தாமணி தைரியம் ஊட்டி அபயம் அளித்திருந்தார்.

சுகப் பிரசவமாகிப் பெண் குழந்தை பிறந்தது. தேதி, 8—4—1933.

அந்தச் செய்தியை அறிந்தபோதும் ராஜாஜி சிறையில்தான் இருந்தார்— வேலூருக்குப் பதிலாகக் கோயமுத்தூரில். தமது பாராட்டுக் கடிதத்தில் அவர், ''ஆனந்தி'' எனக் குழந்தைக்குப் பெயரிடும்படி சொன்னர். ''உன் துக்கத்தைப் போக்கி ஆனந்தம் கொடுக்க இவள் பிறந்திருப்பதால் இந்தப் பெயரே பொருந்தும். ''வசந்த காலத்தில் பிறந்ததால் ''வசந்தா'' என்று தகப்பனரும், அழாமல் அமைதியாய் இருந்ததால், ''சாந்தி'' என்று தாயாரும் குழந்தைக்குப் பெயர் வைக்கலாம் என்றிருந்தார்கள். ஆனல், ராஜாஜியின் விருப்பத்தை அறிந்ததும் தத்தம் விருப்பங்களை விட்டுக் கொடுத்தார்கள்.

ராஜாஜி குடும்பத்தாரும் கல்கி குடும்பத்தாரும் எப்படிச் சுக துக்கங்களைப் பகிர்ந்து கொண்டார்கள் என்பதை அதே கோயமுத்தூர் சிறைச் சாலையிலிருந்து ஐந்து மாதங்களுக்குப் பிறகு ராஜாஜி ருக்மிணிக்கு எழுதிய கடிதம் ஒன்று எடுத்துக் காட்டுகிறது.

24—9—33

நீயும் குழந்தையும் சவுக்கியமாய் இருப்பது பாப்பாவின் கடிதங்களால் தெரிய வருகிறது. (''பாப்பா'' என்பது ராஜாஜியின் மூத்த குமாரி நாமகிரியின் செல்லப் பெயர். அப்போது நாமகிரி கணவரை இழந்து துக்கப்பட்டுக் கொண்டிருந்த சமயம்.)

நீ பாப்பாவிடம் காட்டி வரும் அன்பைப் பற்றி அவள் ஒவ்வொரு கடிதத்திலும் அளவற்ற சந்தோஷத்துடன் எழுதுகிறுள். உன் கூட இருக்கும் சந்தர்ப்பம் அவளுக்குக் கிடைத்தது பெரும் பாக்கியம் என்றே எண்ணுகிறேன். இது எனக்குப் பெரும் ஆறுதல் தருகிறது. உன்னுடைய பெருங் குணமும் பிரியம் காட்டும் தன்மையும் அவளுக்கு இருக்கும் துக்கத்தை மறைக்க உதவுகிறது.

நான் சவுக்கியமாய் இருப்பதாகக் கிருஷ்ணமூர்த்திக்குச் சொல்லவும். என் கூடத் தண்டனை பெற்றவர்களைப் பற்றி நினைத்தால்தான் மனத்தில் சங்கடம் ஏற்படுகிறது. மற்றப்படி எனக்கு இவ்விடம் வேண்டிய சவுகரியங்கள் இருக்கின்றன. உன் உடம்பைச் சரியாகப் பார்த்துக் கொள்.

(தொடரும்)



''ஏன் சார், இரட்டையரான நீங்களும் லக்ஷ்மணனும் ஒரே மாதிரி இருப்பதால் பல சங்கடங்கள் உண்டாகுமே!'' என்றுர் பத்திரிகை நிருபர் ஒருவர்.

இந்தக் கேள்விக்கும் பதில் கூறிக் கூறி அலுத்துவிட்ட ராமன், ''ஆமாம் சார்!'' என்று கூறி நிறுத்திக் கொண்டார்.

நிருபர் விடவில்லை. ''உங்களிடம் பணம் கடன் வாங்கிப் போகிறவர்கள் லக்ஷ்மணனிடம் திருப்பிக் கொடுப்பார்கள். நீங்கள் காதலித்த பெண்ணை லக்ஷ்மணன் கல்யாணம் செய்துகொள்ள நேரலாம். இல்லையா?''

ராமனுக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது. சொன்னுர்: ''அதுமட்டுமா? லக்ஷ்மணன் இறந்து விட்டான். என்னைப் புதைத்துவிட்டார்கள்!''

-ஸ்ரீனிவாசன்

# ஒரு மனத்தின்

வெ.ஜானகி



அந்தப் பையனைத் தடுத்து நிறுத்தி விட்டு, பில்லுக்கான பணத்தைக் கடைக்காரனிடம் கொடுத்தாள். சாமான்களை அள்ளிப் பையில் போட்டுக் கொண்டு வெளியே வரும் போது, ஒவ்வொரு கணமும், மிட்டாய் டப்பா மறைந்ததைக் கண்டு பிடித்து விட்டு அவளைப் போகவிடாமல் தடுத்து நிறுத்தப் போகும் கடைக்காரனின் குரலை எதிர்பார்த்துக் கொண்டேதானிருந்தாள். ஆனால் அப்படி ஏதும் நேரவில்லை.

கடையை விட்டு வரும்போது அவள் நினைத்துக் கொண்டாள்: ''இந்தத் தடவையும் தப்பிச்சுட்டேன். ஆனால் எத்தனை நாளைக்கு இப்படியே...? எறிலே போய் முடியும்? அதை நெனச்சாத்தான் பயமாயிருக்கு...''

''இன்னும் என்னம்மா வேணும்?'' என்றான் கடைக்காரன்.

லக்ஷ்மி, தன் உலர்ந்து போன உதடுகளை நாக்கால் இலேசாக ஈரப்படுத்திக் கொண்டு, மெல்லிய குரலில், ''அந்த... அந்த ...உங்க பின்னாடி ஒரு 'ஜாம்' பாட்டில் இருக்கே, அதை எடுங்க'' என்றாள்.

அவளுடைய இடது கை, அவளுக்கும் கடைக்காரனுக்கும் இடையேயிருந்த பலகையின் மேல் சற்றே தள்ளிக் கிடந்த அந்தப் பளபளப்பான, புத்தம் புதிய மிட்டாய் டப்பாவை நோக்கி இன்னும் சில அங்குலங்கள் நகர்ந்தது.

கடைக்காரன் 'ஜாம்' பாட்டிலை எடுக்கத் திரும்பிய மறுகணம், ஓர் அசாதாரண வேகத்தோடு லக்ஷ்மியின் கை செயல்பட்டு, அந்த மிட்டாய் டப்பாவை எடுத்து, அவளுடைய வலது கரத்திலிருந்து தொங்கிய பைக்குள் போட்டுக் கொண்டது.

''இந்தப் பாட்டிலா, அம்மா?'

''ஆமாம்...ஆமாம்...'' லக்ஷ்மிக்குத் தன் இதயத்தின் பலத்த துடிப்பு கடை முழுதும் கேட்டிருக்க வேண்டுமென்று தோன்றியது. அதேசமயம், அந்தப் பழகிய பெருமிதமான உணர்ச்சி, அவள் நுழைக்கேறுவதையும் அவள் உணர்ந்தாள். மேலே, இன்னும் மேலே... ஒரு போதையைப் போல்! கைகள் முஷ்டிகளாக அழுந்தின, நெற்றியில் வியர்வை துளித்தது.

''இருபது ரூபா, நாற்பது காசு'' என்றான் கடைக்காரன், பில்லை நீட்டியபடி. பிறகு, அவள் முகத்தைக் கவனித்து விட்டு, ''ஏம்மா, ஒரு மாதிரியாயிருக்கிறீங்க? டேய், பையா, ஓடிப் போய் அம்மாவுக்கு ஒரு பாண்டா வாங்கிட்டு வா... நீங்க உட்காருங்கம்மா..'' என்றான்.

'பாண்டா. எதுக்கு? திருடியிருக்கிற சாமானுக்கு வட்டியா?' என்று தனக்குள் நினைத்துக் கொண்ட லக்ஷ்மி, உரக்க, ''அதெல்லாம் ஒன்றும் வேண்டாமப்பா'' என்று

# பிரச்னைகள்



லக்ஷ்மி வீட்டையடைந்த போது, அவளுடைய கணவர் சங்கரன் ஆபீஸிலிருந்து வந்திருக்கவில்லை. வாசலில், அவருடைய பியட் நிற்காதது அவளுக்கு ஏதோ ஒரு விதத்தில் நிம்மதியாக இருந்தது. சில நாட்களாக அவர் அவள் பக்கம் செலுத்தும் பார்வைகள், கண்களில் தோன்றி மறையும் சலனக் கீறல்கள், அவளுக்குத் தாள முடியாதவையாகிக் கொண்டிருந்தன.

மகன் கணேஷ் பள்ளிக்கூடத்திலிருந்து வந்து விட்டிருந்தான். வாசல் கதவை அவளுக்குத் திறந்து விட்டபடி கேட்டான்: ''எங்கேம்மா போயிட்டு வரே?''

''கடையிலே கொஞ்சம் சாமான் வாங்க வேண்டியிருந்தது. அதுக்குத்தான்...'' அவள் அவனைத் தாண்டிக் கொண்டு உள்ளே சென்று சமையலறையில் ஒவ்வொரு சாமானாக ஷெல்ஃபில் எடுத்து வைக்கத் தொடங்கினாள்.

''பால் சாப்பிட்டியா, கணேஷ்?''

''இன்னும் இல்லேம்மா ... இப்பத்தான் வந்தேன் .. இது என்னம்மா?''

''......''

''எதுக்கும்மா ஸ்வீட்ஸ் வாங்கினே? அப்பாதான் நேத்திக்கு ஒரு டின் வாங்கிண்டு வந்தாரே?''

லக்ஷ்மி பாலை அடுப்பின் மீது வைத்து, அடுப்பைக் கவனமாகப் பற்ற விட்டவாறே கூறினாள்: ''என்னமோ வாங்கினேன், நன்னாயில்லே?''

''ம்..ம்... ஏம்மா, நாளைக்கு என் நண்பன் கோபாலுக்குப் பிறந்த நாள். இதைக் கொண்டு போய்க் கொடுக்கட்டும்மா?''

''கொடேன்.''

மனத்தில் திடீரென்று ஏற்பட்ட நிம்மதியில் லக்ஷ்மிக்குக் கண்கள் சற்றே இருண்டு வருவது போலிருந்தது. ஆனால் நாளைக்கு...?

''ஏன் லக்ஷ்மி? எதுக்கு அந்த ஸ்வீட் பாக்கை வாங்கினே? நான்தான் நேத்தி ஒண்ணு வாங்கிண்டு வந்தேனே?'' நெற்றிப் பொட்டைச் சீர்படுத்திக் கொண்டிருந்த லக்ஷ்மி, அதை நிறுத்திவிட்டு, நிலைக் கண்ணாடியின் வழியாகத் தன் கணவரின் முகத்தைத் தேடினாள். ஆனால் சங்கரன் அலமாரி டிராயரில் எதையோ தேடிக் கொண்டிருந்ததால், அவருடைய முதுகுப்புறம் தான் அவளுக்குத் தெரிந்தது. சட்டென்று, நெஞ்சில் கனலைப் போல் கோபம் நெருப்பு விட்டு எரிந்து பிறகு அடங்கியது.

''கணேஷ் ஏதோ ஃப்ரெண்டுக்குப் பிறந்த நாள்னு சொன்னான். அவனுக்குக் கொடுக்கறதுக்கு இருக்கட்டுமேன்னு வாங்கிண்டு வந்தேன்!'' அவளையும் மீறி அந்தப் பொய்யின் நயத்தை மூளை பாராட்டிக் கொண்டிருந்தது.

பிறகு அவர், ''கிளம்பு லக்ஷ்மி, விருந்துக்கு நேரமாயிடப் போறது'' என்றபடி அறையை விட்டுச் சென்று விட்டார்.

புடவையை மாற்றிக் கொண்ட பின், கணேஷிடம் சொல்லிக் கொள்வதற்காக அவன் அறையை நோக்கிச் சென்றவள், கதவுக்கருகில் தயங்கினாள். உள்ளே, சங்கரனின் குரல் கேட்டது.

''ஏன் கணேஷ், எதுக்குப் புது ஸ்வீட் டப்பா வாங்கிண்டு வரச் சொன்னே? நான் நேத்திக்கு வாங்கிண்டு வந்ததையே உன் ஃப்ரெண்டுக்குக் கொடுக்கலாமே?''

''நானு வாங்கிண்டு வரச் சொன்னேன்? அம்மா எதுக்கோ வாங்கிண்டு வந்துட்டா... அதுக்கப்புறம்தான், நான் கோபாலுக்குப் பிறந்த நாள்னு சொல்லி அதை எடுத்துண்டேன்!''

லக்ஷ்மி சட்டென்று நகர்ந்து வாசல் பக்கத்து அறைக்கு வந்து விட்டாள். முகம் சற்றே வெளுத்து விட்டிருந்தது.

''போகலாமா லக்ஷ்மி?'' என்று சாதாரணமாகக் கேட்டபடி வந்த சங்கரன், அவள் முகத்தைப் பார்த்ததும், இரண்டே எட்டில் அருகில் வந்தார்.

''உடம்பை ஏதாவதுசெய்யறதா லக்ஷ்மி?''

இனம் புரியாத விதத்தில் லக்ஷ்மிக்கு ஓர் ஆத்திரம்தான் தோன்றியது. "ஒன்னும் செய்யல்லே... கொஞ்சம் தலைவலி, அவ்வளவுதான்."

"பின்னே விருந்துக்குப் போக வேண்டாமே? நான் போன் பண்ணிச் சொல்லிடட்டுமா?"

"அதெல்லாம் ஒன்னும் வேண்டாம்.." எதுக்குச் சின்ன விஷயத்தையெல்லாம் பெரிசுபடுத்தறேள்?" அவள் சட்டென்று அவரிடமிருந்து திரும்பி வாசலை நோக்கிச் சென்று விட்டாள்.

கடற்கரைச் சாலை வழியாகக் கார் நிதானமாகச் சென்று கொண்டிருந்தபோது, அவர், "லக்ஷ்மி" என்றார்.

"என்?"

"லக்ஷ்மி, விருந்துக்கு இன்னும் நாழியாகலே. நான் கொஞ்சம் நேரம் காரை இங்கேயே நிறுத்திக்கறேன். உன்னோட பேசணும்..." கார் நின்றது. "போன வருஷம், அந்த இன்னொரு குழந்தையும் நமக்குத் தங்கியிருந்தால் ... ஆனால் நான் அதை நெனச்சு இப்போ வருத்தப்படலே...!

"அந்தக் கொழந்தை போனப்புறம் நீ என்னவோ ஒரு விதத்திலே மாறியிருக்கே, அதுதான் எனக்குக் கவலையாயிருக்கு... அதைத்தான் என்னாலே தாங்கிக்க முடியலே. லக்ஷ்மி! எங்கிட்டே சொல்லேன், உனக்கு என்ன பண்ணறது?" கரைந்து கொண்டிருந்த அவள் மனம் சட்டென்று இறுகியது.

'கவலே! என்னைப் பத்தி என்ன கவலே? இப்ப கவலே என்பார்! அப்புறம் மூளை சரியில்லே என்பார். கடைசியா, ராஜம் மாமியோட அம்மா மாதிரி பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலே கொண்டு போய்த் தள்ளி விடுவார்' இப்படி அவள் மனத்தில் சிந்தனை ஓட்டங்கள் பாய்ந்தன.

"எனக்கொன்னுமில்லே..எனக்கொன்னுமில்லே... நீங்களா எதையாவது நெனைச்சுண்டா, அதுக்கு நான் என்ன செய்யறது?"

"உனக்கு உடம்பு ஒன்னுமில்லே லக்ஷ்மி! ஆனால், இப்ப கொஞ்ச நாளா, ஞாபக மறதியா ... கவனப் பிசகா ... ஒரு மாதிரியாயிருக்கே பாரு, அதைத்தான் சொன்னேன். அன்னிக்குக் கூட, புடைவைக் கடைக்குப் போயிட்டு ஏதோ புடவையை மறந்து போய்ப் பையிலே போட்டுண்டுட்டே ... அப்புறம் கடைக்காரன் பார்த்துச் சொன்னனே?...ஒரு 'வீக்னஸ்' தானே இதெல்லாம்? உடம்பு பலஹீனமானு..."

"வயசானா, ஞாபகமறதி வரது இல்லையா? அது ஒரு தப்பா? நான் என்ன, அந்தப் புடவையைத் திருடவா திருடினேன்? எனக்கென்ன, பைத்தியமா பிடிச்சுப் போச்சு?" லக்ஷ்மியின்குரல் அசாதாரணமாக உயர்ந்தது.

காரின் பக்கமாகச் சென்று கொண்டிருந்த ஓரிருவர் திரும்பிப் பார்த்தனர். லக்ஷ்மி மௌனமானாள். அவர் அவளிடம் வேறொன்றும் பேசாமல், காரைக் கிளப்பினார்.

விருந்தில் அவர்கள் இருவரும் பிரிந்து விட்டார்கள். சங்கரனை, அவருடைய ஆபீஸ் நண்பர்கள் சூழ்ந்து கொண்டு விட்டார்கள். லக்ஷ்மி, கண்ணாடி டம்ளரிலிருந்த பழச்சாறை உறிஞ்சியவாறே ஒரு பக்கமாக நின்றுகொண்டிருந்தாள். ஒரு பெரிய அதிகாரியின் மனைவி என்ற மரியாதையில், தெரிந்த பெண்மணிகள் ஓரிருவர் அவள் பக்கத்தில் நின்று பேசிவிட்டுச் சென்றார்கள். விருந்து கொடுத்த சீதாராம் என்பவரின் மனைவி, லக்ஷ்மியை வரவேற்று, உபசரித்து விட்டு அகன்றாள்.

## ராஜபரம்பரை

கீதையின் வாக்குப்படி நாடகம் போட வேண்டியது சேவா ஸ்டேஜ் கடமை; பலனை எதிர்பாராமல் செயலாற்ற வேண்டியதுதான் என்று கூறலாம்.

ஆனால் அதே கீதையின் வாக்கு ரசிகர்களுக்குப் பொருந்துமா? நாடகம் பார்க்க வேண்டியது நம் கடமை பலனை எதிர்பார்க்கலாகாது என்று சொல்வது சாத்தியமா? நல்ல நாடகம் பார்த்தோம் என்ற திருப்திக்காகத் தானே அரங்கில் கூடுகிறோம்.

'ராஜ பரம்பரை' கீதையின் உன்னதத் தத்துவங்களை எடுத்துக் கூற எழுதப்பட்ட சமூகச் சித்திரம். அத்தனை உயர்ந்த விஷயங்களை உள்ளத்தில் புகுத்தி நிலைநிறுத்த வேணுமானால் அதற்கேற்ப நாடகத்துக்கு மிக வலுவான கதை அமைப்பு வேண்டும். உணர்ச்சிகளைக் கொட்டி நடிக்கக்கூடிய கட்டங்கள் நாடகத்தில் அமைய வேண்டும்.

ஆனால் ராஜ பரம்பரை மிக இலேசான கதை அமைப்பு கொண்டிருக்கிறது. நகைச்சுவைக்கு அதிக அளவில் முக்கியத்துவம் தரப்பட்டிருக்கிறது. மிக உயர்ந்த தத்துவங்களை இந்த மிக எளிய அமைப்பில் தர முற்படும் போது ரத்தின ஹாரத்தை ஓலைப் பெட்டியில் வைத்ததுபோல் இருக்கிறது.

ஆனாலும் சொல்ல வந்த கருத்துக்கள் உன்னதமானவைதாம். நடிப்பு, டைரக்ஷன், காட்சி ஜோடனை எல்லாம் முதல்தரம்தான். சேவா ஸ்டேஜின் வழக்கமான நடிகர்கள் அனைவரும் (காந்திமதி, சகஸ்ரநாமம், பீலி சிவம் முதலியோர்) இதில் என்றும்போல் உழைத்துப் பாடுபட்டிருக்கிறார்கள். கோமல் சுவாமிநாதனின் வசனங்கள் — விரசம் தட்டுகிற ஓரிரு இடங்கள் தவிர — நறுக்குத் தெறித்தாற்போல் நன்றாக அமைந்துள்ளன.

பெரிய விஷயத்தைச் சொல்ல வந்த துணிச்சலைப் பாராட்டும் வகையில் துளி அளவு அநுதாபத்துடன் அமர்ந்திருந்தால் நாடகத்தை வெகுவாக ரசிக்கலாம்.

— குட்டி கிருஷ்ணன்



# 286

# 165

# 135

# 65

மேஜிக் எண்கள் அல்ல ஆனால் கெல்வினேடர் எண்கள். அவைகள் லிட்டர் கொள்ளளவுகளை குறிக்கின்றன. அதாவது ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஏற்றவாறு ஒரு கெல்வினேடர் உள்ளது— அதன் எண் எதுவாயினும். ஏன் குடும்பததினரை கெல்வினேடர்கள் மகிழ்வுடன் இருக்கச் செய்கின்றன என்பதற்கான காரணங்களில் அதுவும் ஒன்று.

**எல்லா எண்களும் ஒரு குடும்பத்தை மகிழ்விக்கவே, நபர்களின் எண்ணிக்கை எப்படியிருப்பினும்**

## ஸ்பென்ஸர்ஸ்

**— 1865 முதல் நமது வாழ்க்கைப் பாதையில் சேவையுடன்**

ஸ்பென்ஸர் & கம்பெனி லிட்
153, மவுண்ட் ரோடு
சென்னை-600002
19- அலிபூர் ரோடு
டெல்லி-110006
ஸ்பென்ஸர்ஸ் பில்டிங்
ஃபோர்ஜெட் தெரு
பம்பாய்-400036
டைமண்ட் ஹார்பர் ரோடு
கித்தர்பூர்
கல்கத்தா-700023

அதற்கும் மேலாக, கெல்வினேடர் வைத்திருப்பவர்கள் மகிழ்ச்சியுடன் இருப்பதற்கு காரணம் யாதெனில் ஒரு முறை வாங்கியவுடன் இரண்டு நன்மைகளை அடைகின்றனர். ஒவ்வொரு கெல்வினேடருடன் பெயர் பெற்ற ஸ்பென்ஸர்ஸின் சேவைக்கு உத்தரவாதம் அளிக்கப்படுகிறது. அகில இந்திய தொடர்புவசதியுடன் ஸ்பென்ஸர்ஸ் குறித்த கால திறமையான, தன்னடக்கமுள்ள விற்பனைக்குப் பின் சேவையை உறுதிப்படுத்துகின்றனர். இந்த நம்பிக்கை ஒரு முறை வாங்கியவுடன் உங்களை மறக்காமலிருப்பது இதுதான் கெல்வினேடரைப் பற்றிய சிறப்பு அம்சம்.

கெல்வினேடரின் மற்ற சிறப்புகள் :

- சிறந்த உள் வடிவமைப்பு
- ஒரு பக்க லைனிங்
- காந்த முறையுடன் கதவமைப்பு
- போலார்ஸ் பியர் கம்ப்ரெஸர்
- எழிலான சீரமைப்புடன் டிசைன்

FOCUS.SC.2391 TAM (a)



**தேர்ந்தெடுக்கப்படுவது ஒவ்வொரு முறையும்!**
**அதுதான் கெல்வினேடர் ஸ்பென்ஸரிலிருந்து!**



''நேற்று நீங்கள் பார்த்த சினிமா தண்டச் செலவு என்றீர்கள். இன்று அதே சினிமாவை இரண்டாம் தடவை பார்த்துவிட்டுப் பிரமாதம் என்கிறீர்களே !''

''ரூ 3-50 டிக்கட் வாங்கிப் பார்த்த பிறகு தானே எனக்கு ஓசிப் பாஸ் கிடைத்தது !''

---

லக்ஷ்மிக்கு ஒன்றிலும் நாட்டமில்லாமல் உடலும், உள்ளமும் சோர்ந்து விட்டாற் போலிருந்தது. சுழன்று கொண்டு வந்த அவள் விழிகளில், சட்டென்று அது தட்டுப்பட்டது.

ஒரு சிறிய வெள்ளிப் பொம்மை. பளபளவென்று, யாரோ பாலிஷ் போட்டு வைத்திருந்தார்கள். அவள் நின்றிருந்த இடத்துக்கு நேர் எதிரே, ஒரு மேஜையின் மேல் செவ்வந்திப்பூக்கள் வைத்திருந்த ஒரு பூக்குவளையின் அருகே, விளக்குகளின் வெளிச்சம் பட்டு மின்னிக் கொண்டிருந்தது அது.

'இங்கேயுமா? வேண்டாம். நான் எங்காவது ஓடிவிட வேண்டும்!' என்று பதறியது மனத்தின் ஒரு பக்கம்.

''இங்கேதான் வேண்டும். இதுவே வேண்டும். இப்பொழுதே வேண்டும்'' என்று ஆணித்தரமாக ஓதியது மனத்தின் இன்னொரு பக்கம்.

கையிலிருந்த டம்ளரைப் பக்கத்தில் ஓர் முக்காலியின் மேல் வைத்த லக்ஷ்மி, தன்னைச் சுற்றிப் பார்த்துக் கொண்டாள். ஒருவரும் அவளைக் கவனித்ததாகத் தெரியவில்லை. அவளுடைய வலது கை சடாரென்று அந்தப் பொம்மையை அபகரித்து, கைப்பையில் போட முயன்ற போது, ''ஏனம்மா அதை எடுக்கறீங்க? யாரு நீங்க?'' என்று அதட்டும் குரல் எழுந்தது.

திறந்த கைப்பை திறந்தபடியே யிருக்க, கையில் பிடித்திருந்த பொம்மை கையிலேயே இருக்க, அதிர்ச்சியில் முகத்திலிருந்த ரத்தமெல்லாம் ஒரு கணம் வடிந்தது.

அவன் வெகு வேகமாக அவளருகில் வந்து, அந்தப் பொம்மையை அவள் கைகளிலிருந்து பிடுங்கி 'டக்'கென்று மேஜையின் மேலேயே வைத்தான். அந்தச் சத்தம்தான் லக்ஷ்மியை அவளுடைய மலைப்பிலிருந்து விடுவித்தது. அவள் உடல் முழுதும் ஒரு முறை சிலிர்த்து அடங்கியது. பின்னால் காலடிச் சப்தம் கேட்டது.

''என்ன வாசு? என்ன ஆச்சு?'' சீதாராமின் மனைவியின் அவசரமான குரல்.

''இந்த அம்மா அந்தப் பொம்மையை எடுத்துக் கைப்பையிலே போட்டுக்கிட்டிருந்தாங்க. நான் பிடிச்சுட்டேன்'' என்றான் வாசு பிடிவாதமாக. லக்ஷ்மிக்குச் சட்டென்று தன் அருகில் சங்கரன் வந்து விட்டது தெரிந்தது. சீதாராம், தம் மேலதிகாரிக்கு நேர்ந்து விட்ட அவமானத்தினால் படபடப்பு அடைந்தவராய், இரைந்து சொல்லிக் கொண்டிருந்தார்: ''வாசு! ஏதாவது மூளை இருக்கா உனக்கு? இந்த அம்மா யார் தெரியுமா? கமலா, ஏன் இந்த மாதிரி பட்டிக்காட்டுப் பசங்களையெல்லாம் வேலைக்கு வைச்சுக்கறே? சங்கரன், நீங்க தப்பா எடுத்துக்காதீங்க...''

சங்கரனின் குரல் அமைதியாக லக்ஷ்மியின் பக்கத்திலிருந்து ஒலித்தது. ''தப்பு என்மேலே தான்... அன்னிக்கே உங்க வீட்டுக்கு வந்திருந்த போது லக்ஷ்மி அந்தப் பொம்மையைப் பார்த்துட்டு, ரொம்ப அழகாயிருக்கு, அதை மாதிரி கொடுத்து இன்னொரு பொம்மை பண்ணணும்னு சொல்லிண்டிருந்தா ... இப்பக்கூட, கொஞ்சம் முன்னாடி எங்கிட்ட உங்களையோ, உங்க மனைவியையோ பார்த்து இதை வீட்டுக்கு எடுத்துட்டுப் போறேன்னு சொல்லச் சொன்னா ... நான்தான் பேச்சுக் சுவாரசியத்திலே மறந்து போயிட்டேன்...''

''அதனாலே என்ன சார்? இந்த வீட்டிலே உங்களுக்கு இல்லாத உரிமையா? தாராளமாக எடுத்துட்டுப் போங்க.''

லக்ஷ்மி, அவர் நீட்டிய பொம்மையைப் பார்த்தாள். வாசுவின், ஆச்சரியம் மறைந்து போய்க் கோபமும் பயமும் பரவும் முகத்தைப் பார்த்தாள்.

மெள்ளச் சீதாராம் நீட்டிய பொம்மையை வாங்கியவள், அதை மேஜையின் மேலேயே வைத்துவிட்டு, இலேசாகப் புன்னகையுடன் சொன்னாள்: ''இது இங்கேயே இருக்கட்டும். நான் கோபமாப் பேசலே .. அப்படி நெனைக்காதீங்கோ ...புதுசா ஒரு சாமான் செய்யறதுக்குச் சகுனம் சரியாயில்லியோன்னு தோணறது. அவ்வளவுதான். அப்புறமா ஒரு நாள் வந்து வாங்கிக்கிறேன். அந்தப் பையனை ஒண்ணும் சொல்லாதீங்கோ .. இவ்வளவு கவனமான வேலைக்காரன் எல்லோருக்கும் அமையறதில்லே!'' அவள் சங்கரனின் பக்கம் திரும்பி, தன் வார்த்தைகளை முடித்தாள்: ''நாம் வீட்டுக்குப் போகலாமா? எனக்குத் தலையைக் கொஞ்சம் வலிக்கிறது!''

அவர்கள் மௌனமாகவே காரில் வீட்டையடைந்தார்கள். மௌனமாகவே உடை மாற்றிக் கொண்டு படுக்கச் சென்றார்கள். கணேஷ் தூங்கி விட்டிருந்தான். அவன் அறைக்குள் எட்டிப் பார்த்துவிட்டு, வீட்டு விளக்குகளை ஒவ்வொன்றாக அணைத்துக் கொண்டு லக்ஷ்மி படுக்கையறையை அடைந்த போது, இருளிலிருந்து சங்கரனின் நிதானமான சுவாஸ ஒலி சன்னமாகக் கேட்டது. லக்ஷ்மி மௌனமாகப் படுக்கையை யடைந்து, படுத்து, போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டாள்.

பிறகு, எப்பொழுதோ, மணி என்ன என்பதைக் கவனிக்காமல், கவனிக்க வேண்டிய அவசியம் எதுவும் தோன்றாமல், அவள்



எதிர்பாராத
விபத்து

படம் : சங்கரன்.

எழுந்தாள். சாப்பிடும் அறையை அடைந்து, அங்கிருந்த ஓர் அலமாரியிலிருந்து அந்தத் தூக்க மாத்திரைகளை எடுத்தவள், மேஜையின் மேல் எல்லா மாத்திரைகளையும் கொட்டி விட்டு, ஒரு டம்ளர் தண்ணீரையும் எடுத்துக் கொண்டு வந்தாள். நிதானமாக மேஜையின் அருகே அமர்ந்து, முதல் மாத்திரையை விழுங்கி விட்டு, இரண்டாவதை எடுக்கப் போகும் சமயம், ''தூக்கம் வரதுக்கு ஒண்ணு போதும் லக்ஷ்மி!'' என்றபடி சங்கரன் வந்து மேஜையின் மேலிருந்த மாத்திரைகளின் மேல் கையை வைத்து ஒதுக்கி விட்டார்.

அதன்பின், ஒரு குழந்தையின் எளிமையுடன், ஒரு குழந்தையின் செயலற்றுப்போன தன்மையுடன், மேஜையின் மேல் தலையைக் கவிழ்த்து கொண்டு லக்ஷ்மி அழுதாள். பல நிமிடங்களுக்கு, உடல் மட்டும் குலுங்க, சத்தமே வராமல் அழுதாள். அதன் பின்னர், விசும்பல்களுக்கிடையே வார்த்தைகள் வெடித்துச் சிதறின. ''எவ்வளவு அவமானம் உங்களுக்கு...என்னைச் சாக விட்டிருக்கணும் நீங்க ... நான் இருந்தாலே கஷ்டம்தானே? என்னாலே என்னை அடக்கிக்கவே முடியலே.. ஒரு வெறி மாதிரி. எனக்கு ஏன் இப்படி ஆயிடுத்து? என்னு, என்னைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலே அடைச்சுடுவேளோ ?''

''அசடாட்டம் பேசாதே, உனக்கொண்ணுமில்லே. நாளைக்கு நீயும் நானும் ஒரு நல்ல டாக்டரைப் போய்ப் பார்ப்போம். எல்லாம் சரியாயிடும்.''

'' ஒருவேளை, எனக்குக் குணமேயா காட்டா....!''

''குணமாகாட்டா?'' ஜன்னல் வழியாக வெளியிருட்டை நோக்கிக் கொண்டிருந்த சங்கரன், சட்டென்று சிரித்தார். ''அப்ப நாம் ஒண்ணு செய்யலாம், லக்ஷ்மி. நான் வேலையை விட்டுடறேன். நாம் ரெண்டு பேரும் எடம் எடமாப் போய், நமக்குப் பிடித்த சாமானைப் பார்த்து வைச்சுக்கலாம். நான் திட்டம் போடறேன், நீ திருடு. கணேஷ் நமக்குக் கணக்கு எழுதட்டும், என்ன?''

தொண்டை வரை எழுந்த சிரிப்பு, கணேஷின் பேரைக் கேட்டவுடன் அங்கேயே கல்லாக உறைந்தது. அடிவயிற்றில் இனம் புரியாத சங்கடம் எழுந்தது.

''கணேஷ்! ... நீங்க ... உங்களுக்கு ... பாருங்கோ அவனுக்கு ஏதாவது தெரியும்னு நெனைக்கறேளா? அவன் சில சமயம் என்னைப் பார்க்கிற விதம்...எனக்குப் பயமாயிருக்கு!''

அவர் சற்று நேரம் மௌனமாக இருந்தார். பிறகு அவர் பேசுகையில், அவருடைய குரல் மிகவும் மென்மையாக இருந்தது.

''ஏன் லக்ஷ்மி? அவனுக்குத் தெரிஞ்சா என்ன? அவனைப் பத்தின ரகசியம் எதுவும் உனக்குத் தெரியலாம்னு, உன்னைப் பத்தின உண்மைகள் அவனுக்குத் தெரிஞ்சா என்ன? அதனாலே உன் மேல் அவனுக்கிருக்கிற பிரியம் குறைஞ்சு போயிடாது. நீயாக உன்னை எங்க கிட்டேயிருந்து பிரிச்சு வைச்சுக்காதே...''

அவர் பேசப் பேச, லக்ஷ்மி தன் மனத்தில் சேர்ந்திருந்த சுமை மிக எளிதில் இறங்கி வருவதைப் போல் உணர்ந்தாள். அதுவே, ஒரு பிரமையாக இருக்கலாம். இருந்தால் என்ன? மனமெங்கும், அவருடைய அன்பு, குளிர்ந்த நீரைப் போல் தென்றல் போல், இதமாகப் பரவியது.

அவள் கையைப் பற்றி நாற்காலியிலிருந்து எழுப்பிய சங்கரன், விளக்கை அணைத்து விட்டு அவளை அழைத்துக் கொண்டு படுக்கையறையை நோக்கிச் செல்கையில், சொன்னார்: ''நாளைக்கு, அந்த மிட்டாய் டப்பாவைக் கொண்டு போய்த் திருப்பிக் குடுத்திட்டு வந்துடறேன், என்ன?''

ஆனால் லக்ஷ்மி அவர் பேச்சைக் கவனித்துக் கொண்டிருக்கவில்லை. இருட்டில் அவருடைய கையை அழுந்தப் பற்றியபடி அவள் நினைத்துக் கொண்டிருந்தாள்:

''இந்தக் கணம், இந்த விநாடி, என் மனசிலே குழப்பமில்லே, பயமில்லே, சலனமில்லே... உங்க பக்கத்திலேயிருக்கிற நிம்மதி தான் இருக்கு. நாளைக்கு, நாளையைப் பத்தி நான் இப்ப நினைக்கப் போறதில்லே. இனிமே வர நாளெல்லாம் இருட்டாகவே இருக்கலாம். ஆனால், இந்த நிமிஷம், நான் வெளிச்சத்திலேயிருக்கேன்!''

---




**சே! சுத்த மோசம்!**

'அரசியல் இப்பொழுது ரொம்பவும் மோசமாகி விட்டது. தேர்தலில் தோற்றுப் போவதற்குக்கூட நிறைய செலவு செய்ய வேண்டியிருக்கிறது!'

- கலெக்ஷன்ஸ் - பாலி

## காட்சி 19

(அரங்கத்தில் இருள். டெலிபோன் மணி அடிக்கிறது. பேச்சுக்குரல்கள் கேட்கின்றன.)

ஆரோக்கியசாமி: ஹலோ! நான் ஆரோக்கியசாமி பேசறேன்.

குரல்: நான்தான் தணிகாசலம். என்ன சொல்லுங்க.

ஆரோ: ஒரு முக்கியமான விஷயம் கேக்கணும்.

தணி: கேளுங்க.

ஆரோ: அட்வகேட் ஜெனரல் நியமனம் இப்போ சமீபத்திலே வரப் போகுதா?

தணி: ஆமாம். அப்படித்தான் பேச்சு. ஏன்? என்ன?

ஆரோ: அது விஷயமா நான் உங்களை நேரே பார்க்கணும்.

தணி: வாங்க பேசுவோம்.

(டெலிபோன் மணி அடிக்கிறது.)

தணி: நான்தான் தணிகாசலம் பேசறேன். பெருமாள் இருக்காரா?

பெருமாள்: பெருமாள்தான் பேசறேன். என்னங்க?

தணி: இந்த அட்வகேட் ஜெனரல் நியமனம் விஷயமா நேத்துச் சொன்னேனே?

பெரு: அதிலே கொஞ்சம் போட்டி இருக்குது. நாலஞ்சு பேர். நீங்க நேரே வாங்க பேசுவோம்.

(டெலிபோன் மணி அடிக்கிறது.)

பெண் குரல்: ஹலோ... யுவர் டிரங் கால் டு டெல்லி... ஸ்பீக் ஆன்...

பெரு: வணக்கங்க. நான் மெட்ராஸ்லேருந்து பெருமாள் பேசறேன். ஒரு முக்கியமான விஷயம். யாரு ஜெயின்தானே... பேசறது?

குரல்: எஸ். ஜெயின் போல்தா...
ஐ யாம் கமிங் டு மெட்ராஸ் டுமாரோ.

பெரு: சரி. நேரே பேசறேன்.

(டெலிபோன் மணி அடிக்கிறது.)

ஜெயின்: ஹலோ... ஐ யாம் ஜெயின் ஹியர். மே ஐ ஸ்பீக் டு...

குரல்: குட் மார்னிங் ஸார்... ஒன் மினிட்.

வேறொரு குரல்: ஹலோ மிஸ்டர் ஜெயின்? ஹௌ ஆர் யூ? வாட் கேன் ஐ டு ஃபார் யூ?

ஜெயின் குரல்: ஐ வாண்ட் டு மீட் யூ இன் பெர்ஸன்.

குரல்: ப்ளீஸ் டு கம். யூ ஆர் ஆல்வேஸ் வெல்கம்.

(டெலிபோன் மணி அடிக்கிறது.)

குரல்: எஸ்?

குரல்: சொன்னேனே முடியுமா?

குரல்: நீங்க நேரே வாங்க.

(டெலிபோன் மணி அடிக்கிறது.)

குரல்: எஸ். ஆமாம். அதுலே ஒண்ணும் சிரமம் இல்லே. அவர் பேர் லிஸ்ட்லே இருந்ததுதானே? இப்ப நீங்களும் சொல்லிட்டீங்க. ஒண்ணும் பிராப்ளம் இல்லே. ஏற்கனவே கன்ஸிடரேஷன்லே இருந்ததுதான்.

குரல்: நான் அவர்கிட்டே சொல்லிடலாமா?

குரல்: ஓ...யெஸ்! அது நிச்சயம்தான். தாராளமாச் சொல்லுங்க. நான் சொன்னேன்னு சொல்லுங்க.

குரல்: தேங்க்யூ!

(டெலிபோன் டயல் செய்யும் சப்தம்.)

## காட்சி 20

(வக்கீல் வீடு. பாத்திரங்கள்: சத்தியநாராயணா, பங்கஜம், ஆரோக்கியசாமி, அருமைநாயகம். டெலிபோன் மணி அடிக்கிறது.)

சத்தியநாராயணா (டெலிபோனை எடுத்து): அட்லஸா... தேங்க்யூ! அட்லஸா.... நேனு அட்வகேட் ஜெனரல்! அடுத்த மாசம். அட்லஸா? தேங்க்யூ.... ஆரோக்கியசாமி கூட ரொம்பச் சொன்னாரா? அட்லஸா? தாங்க்யூ. நானேகூட அதுக்குத் தகுதியே காதா? தாங்க்யூ... அட்லஸா... தாங்க்யூ.



(போனை வைத்துவிட்டுத் தாம் போனில் பேசியதை நினைத்தவாறே நின்றுகொண்டிருக்கிறார்.)

பங்கஜம்: ஏன்னா? என்ன விஷயம்? என் நெஞ்சு படபடன்னு அடிச்சுக்கிறது. ஹார்ட்டே நின்னுடும் போலிருக்கு. மூச்சே நின்னுடும் போலிருக்குன்னா.

சத்: அட்லஸா... தேங்க்யூ!

பங்: அய்யய்யோ முழுப் பைத்தியமே புடிச்சுடுத்தா? இத்தனை நாளா அரையாத்தானே இருந்தேன்? ஆண்டவனே! டாக்டரைக் கூப்பிடட்டுமா?

சத்: ஒத்து பங்கஜம். டாக்டர் உதவி செய்துட்டாரு. அட்வகேட் ஜெனரல் ஆகப் போறானு!

பங்: நிஜமாகவா? அதுக்கு டாக்டர் என்ன உதவி செய்தார்?

சத்: டாக்டர் பெருமாள், டாக்டர் தணிகாசலம், டாக்டர் ஜான் அந்தரு கூப்பிட்டு ஆரோக்கியசாமி பேசியிருக்காரு. என் பேரு லிஸ்டிலே இருந்தது. அதுக்கு மேலே கொஞ்சம் பேசினதாலே நானே அட்வகேட் ஜெனரல் ஆக போதானு!

பங்: யாரு சொன்னது?

சத்: டெலிபோன்லே இன்ஃபர்மேஷன் ஒச்சந்தி. கவர்மெண்ட் சைடுலேந்து நியூஸ் ஒச்சந்தி. அடுத்த மாசம் அட்வகேட் ஜெனரல்!

பங்: அய்யோ! அடுத்த மாசம் வரைக்கும் நான் சாதாரண வக்கீல் பெண்டாட்டிதானா? ஏன்னு, போன் உங்களுக்குத்தான் வந்ததா? ஏதாவது ராங் நம்பரா இருக்கப் போறது?

சத்: லேது, பங்கஜமு! இதி நிஜ நியூஸ்!

பங்: அய்யோ! கொஞ்சம் இருங்க. என் திருஷ்டியே உங்களுக்குப் பட்டுடும்போலிருக்கு! கொஞ்சம் இருங்கோ கற்பூரம் சுத்திப் போடறேன்.

(உள்ளே போகிறாள்.)

சத்: தேவுடா! ஏடு கொண்டல வாடா! கோவிந்தா! அட்வகேட் ஜெனரல் ஆகப் போத்தாணுரா! நாகு தகுதி இருக்குது இல்லேயா? லிஸ்ட்லோ பேர் இருந்தது. ஆரோக்கியசாமியும் ஒக்க வார்த்தை செப்பினாரு. அந்தா நீ தயா. ஆரோக்கியசாமி தயா.

(பங்கஜம் ஆரத்தியுடன் வருகிறாள்.)

பங்: நில்லுங்கோ! அய்யோ! ஆண்டவனே! அடுத்த மாசம் சீக்கிரம் வரணும். வாட் ஈஸ் திஸ், லுக்கிங் தட் சைடு? ஸீ திஸ் சைடு. ஆரத்தி டேக்கிங்!

சத்: ஏமிட்டி இதி இங்கிலீஷா?

பங்: அட்வகேட் ஜெனரல் ஒய்ஃப் ஆகப் போறேன். பேசிப் பழகிக்கப் படாதா? அவர் வரார்! அவர் வரார்!

(ஆரோக்கியசாமி வருகிறார்.)

சத்: நில்லண்டி. கொஞ்சம் இருங்க.

(கற்பூரத் தட்டை வாங்கி அவருக்கு ஆரத்தி காட்டுகிறார். பங்கஜம் உள்ளே போகிறாள்.)

சால தாங்க்ஸ். தேவுடா! அந்த்த நீ தயா. நாகு தகுதி இருக்குது. நீங்க ஒரு வார்த்தை சொன்னது ரொம்ப நல்லாப் போயிந்தி. கூசோண்டி, கூசோண்டி.

ஆரோக்கியசாமி: மிஸ்டர் சத்தியநாராயணா! நான் என்ன பெரிய காரியம் பண்ணிட்டேன்? உங்க பேர் கன்ஸிடரேஷன்லே இருந்தது. ஏதோ என்னால் ஆனது ஒரு வார்த்தை...

சத்: அட்ல செப்ப கூடாது. சொல்லக் கூடாது. ஒரு வார்த்தை தானிக்கு என்ன வால்யூ!

ஆரோ: உங்க கிட்ட முன்னே கேட்ட அந்த ரெகார்ட்ஸ்... சாட்சியங்கள்...

சத்: பேசக் கூடாது! ஏமி அந்த ரெக்கார்ட்ஸ்? நேனு அட்வகேட் ஜெனரல் ஆயினப்புறம் கவர்ன்மெண்டுக்கு எதிரா கேஸ்லே ஆஜராகக் கூடாது! அதி தப்பு. லோ நேனு பாதிரியார் கேஸ்லே ஆஜர் ஆகக் கூடாது. நானு அந்தச் சாட்சியங்கள் உங்க கிட்டயே இஸ்தானு. இப்புடு எனக்கும் அந்த கேஸுக்கும் சம்பந்தம் லேது. ரிக்கார்ட்ஸ் இரும்புப் பீரோவிலே உந்தி. கொஞ்சம் இருங்கோ. பங்கஜமு! பங்கஜமு!

(பங்கஜம் சாட்சியங்கள் அடங்கிய பெட்டியுடன் வருகிறாள்.)

பங்: இதோ அந்த ரெக்கார்ட்ஸ். கொண்டு வந்துட்டேன். இதுக்காகத்தானே கூப்பிட்டேள்? எனக்குத் தெரியாதா உங்களை? இந்தாங்கோ. நீங்களே அவா கையிலே கொடுங்கோ.

சத்: நீவு கொடுத்திடு. காரணங்கதானே சொல்றேன். ஈய்...ஈய்...!

ஆரோ: தேங்க் யூ மிஸ்டர் சத்தியநாராயணா!

சத்: நா ஒய்ஃபுக்கோ தாங்க்ஸ் செப்பண்டி அவளல்லவா கொடுத்தது? இதிலே எல்லாம் இருக்குது. டேப், லெட்டர், பேப்பர்ஸ் எல்லாம்.



"வாட் ஈஸ் திஸ், லுக்கிங் தட் சைடு? ஸீ திஸ் சைடு. ஆரத்தி டேக்கிங்!"

ஆரோ: நான் வரட்டுமா?

பங்: ஒண்ணுமே சாப்பிடாம போறேளே?

ஆரோ: அந்த அருமை நாயகம் வந்தா...

சத்: வந்தா ஏமி? அவரு ரொம்ப கோ-ஆப்பரேஷன் லேது. எனக்கு அவரு கேஸ்லோ சந்தேகம் ஒச்சந்தி.

பங்: அவர் என்ன பொய் சொல்றரோ? எங்களுக்கு என்ன தெரியும்? நாங்க என்ன கண்டோம்?

ஆரோ: அவர் நம்மைத் தாமே உண்மையான கிறிஸ்டியன்னு சொல்லிக்கிறார்.

பங்: அவர் கிடக்கிறார் விடுங்கோ. உங்களை மாதிரி நல்ல உள்ளம் கொண்டவா தான் கிறிஸ்டியன். நீங்க பார்க்காத ஜீஸஸ்ஸா, நீங்க பார்க்காத ஏசுவா?

(அருமைநாயகம் வருகிறார். பங்கஜம் உள்ளே போகிறாள்)

அருமைநாயகம் : குட் மார்னிங் மிஸ்டர் சத்தியநாராயணா!

சத்: ரண்டி... ரண்டி... நேனு அட்வகேட் ஜெனரல் ஆகப் போதானு. இதனுலே கவர்மெண்டுக்கு எதிரா கேஸ்லே ஆஜர் ஆகக் கூடாது. ஸோ உங்க கேஸ்லே நான் வரக் கூடாது. ஐ யாம் ஸாரி. இவர் கிட்ட ரெக்கார்ட்ஸ் என் ஒய்ஃப் கொடுத்திருக்குது. நான் கொடுக்க லேது. ஒய்ஃப் கையாலே கொடுத்தது. நீங்க இவர் கிட்டேயிருந்து வாங்கிக்கோங்கோ. நாரு பனி உந்தி. ஒஸ் தானு. ஆரோக்கியசாமி ஒஸ்தானுண்டி. மிஸ்டர் அருமை நாயகம்! ஒன் மினிட். மீ தலகா பயன பிரம்ம தேவுடு சரிகா எழுத லேது. ஐ யாம் ஸாரி.

(சத்யநாராயணா உள்ளே போகிறார்)

ஆரோ: எஸ் மிஸ்டர் அருமை நாயகம்! இன்னொரு வியாபாரத்தை இப்பத்தான் முடிச்சேன். என்ன? அவர் பேசிட்டுப் போறது புரியுதா? என்கிட்டே ரிக்கார்ட்ஸைக் கொடுத்துட்டு 'ஒய்ஃப் கொடுத்தாங்க' நீங்க வாங்கிக்கிட்டுப் போங்கன்னு சொல்லிட்டுப் போறார். எதுக்குன்னு தெரியுதா?

அரு: தெரியுது. கொஞ்ச நாளா எனக்குக் கூட இதெல்லாம் புரிய ஆரம்பிச்சிருக்குது. அவர் மனச்சாட்சியைச் சமாதானம் செய்து கொள்ள அப்படிச் சொல்லிட்டுப் போறார்.

ஆரோ: இப்பவும் உங்களுக்குப் புரியலே. அவர் எதுக்காக மனச்சாட்சியைச் சமாதானம் செய்துக்கணும்? அவர் மனச்சாட்சியை நான்தான் விலைக்கு வாங்கிட்டேனே! அவர் உங்களை ஏமாத்திட்டுப் போறார்!

அரு: குப்புசாமி வீட்டுக்குப் போனேன். அவங்களைப் பணம் கொடுத்து வாங்கிட்டீங்கன்னு தெரிஞ்சுது. இவரை என்ன கொடுத்து வாங்கினீங்க?

ஆரோ: பதவி! பொஸிஷன். அதைக் கொடுத்தேன். இது நேரிடையான வியாபாரம் இல்லே. இருந்தாலும் வியாபாரம் தான். இவர் பையனை விலைக்கு வந்தான். பேரம் சரியா இல்லே. அதைவிட அவன் ஃபாதரே தேவலேன்னு இவரை வாங்கிட்டேன்!

அரு: மை டியர் ஸன்...

ஆரோ: என்னை அப்படி அழைக்க உங்களுக்கு உரிமை இல்லே. நீங்க பாதிரி இல்லேன்னு அடிக்கடி நினைவுபடுத்திக்கிட்டே இருக்கணுமா?

அரு: மிஸ்டர் ஆரோக்கியசாமி! நீங்க எனக்கு எதுவுமே நினைவுபடுத்த வேண்டாம். நான் உங்களுக்கு ஒரு விஷயத்தை நினைவுபடுத்துகிறேன். தாமஸ் வெளியே இருக்கும் வரை உண்மையை நிரூபிக்க எனக்குச் சந்தர்ப்பம் இருக்குது.

ஆரோ: இன்னமும் அது முடியும்னு நினைக்கிறீங்களா?

அரு: ஏசு எனக்கு உதவி செய்வார்.

ஆரோ: ஏசுதான் இந்தச் சாட்சியங்களை எங்கிட்டே சேர்ப்பிச்சுட்டாரே!

அரு: யூ ஆர் மிஸ்டேக்கன்! அது ஏசு செய்த வேலை இல்லே. சைத்தான் செய்த வேலை! மிஸ்டர் ஆரோக்கியசாமி! இத்தனை

"நீயே கொடுத்துடு.. காரணமாத்தான் சொல்றேன், கொடு! கொடு!"

உண்மைகளை ஏசு எங்கிட்ட இதுநாள்வரை கொடுத்து வைக்கலியா? திரும்பவும் கொடுக்க மாட்டார்னு நீங்க ஏன் நினைக்கிறீங்க? நீங்களே கூட உண்மையை ஒப்புக்குங்க. உங்களுக்கு அதுதான் கௌரவம். பெருந்தன்மை.

ஆரோ: கௌரவத்தைக்கூட நான் விலைக்கு வாங்கறேன்னு சொல்லியிருக்கேனே. தாமஸ் வெளியே இருக்கிறவரை நம்பிக்கை இருக்குங்கறீங்க. அவனையும் உள்ளே தள்ளினா?

அரு: அது உங்களாலே முடியாது. அவன் இருக்கிற இடம் அப்படி. அவனுக்குப் பாதுகாப்பா இருக்கிறார் ஒரு பக்தர். அவரை உங்களாலே விலைக்கு வாங்கவே முடியாது.

ஆரோ: நான் மனசு வெச்சா, பக்தனை மட்டும் இல்லே, அந்தப் பக்தன் நம்பற கடவுளையும் வாங்குவேன். பணத்தாலே எதையும் வாங்க முடியும்!

அரு: அந்தப் பக்தன் உண்மைக்காகவே வாழுறவர். அவருக்கு எது மேலேயும் ஆசை கிடையாது. பணம் — பதவி — எதுவுமே தேவையில்லை அவருக்கு. அவரை உங்க பணத்தாலோ அந்தப் பணத்தை வெச்சு வர பதவியாலோ வாங்க முடியாது.

ஆரோ: அத்தனை நம்பிக்கை இருந்தா அந்தப் பக்தன் யார்ன்னு சொல்லுங்க. அவரையும் வாங்க முடியும்னு காட்டறேன்!

அரு: அசட்டுத்தனமாகப் பேசாதீங்க. அவர் கடவுளுக்கும், உண்மைக்கும் மட்டுமே அடிமை. உண்மையின் அடிமைகள் விலைக்கு வரமாட்டாங்க. அந்தச் சிவபக்தரை உங்களாலே கொலை செய்ய முடியும். ஆனா விலைக்கு வாங்க முடியாது!

ஆரோ: அவரை நான் விலைக்கு வாங்கிடுவேன்னு நீங்க பயப்படறீங்க. அதனாலேதான் அவர் யாருன்னு சொல்ல மாட்டேங்கறீங்க!

அரு: நோ! அவரு யாருன்னு சொல்லிட்டாப் போலீஸுக்குத் தகவல் கொடுக்கலாம். அதை நினைச்சு நீங்க என்னைக் கேக்கறீங்க !

ஆரோ: நான் போலீஸுக்குத் தாமஸ் இருக்கிற இடத்தைச் சொல்ல மாட்டேன். நானே போய்த் தாமஸை அழைச்சுக்கிட்டு வந்து வேறே ஓர் இடத்திலே ஒப்படைச்சுப் பெருந் தன்மையையும் விலைக்கு வாங்கிக் காட்டப் போறேன்!

அருமை: யார்கிட்டே ஒப்படைப்பீங்க?

ஆரோ: பிஷப் கிட்டே!

அரு: நான் உங்களை நம்பத் தயாராயில்லே. ஏன்னா நீங்க ஒரு உண்மையான கிறிஸ்தவன் இல்லே! போலீஸ்கிட்டே ஒப்படைக்கத்தான் திட்டம் போடறீங்க.

ஆரோ: நான் அந்தப் பக்தனை விலைக்கு வாங்கிடுவேன்னு நீங்கதான் பயப்படறீங்க.

அரு: அப்படிச் சொல்லாதீங்க! அவரை வாங்கக் கூடிய பொருள்னு நான் நினைச்சா எனக்குத்தான் அவமானம்! போலீஸுக்குச் சொல்லிங்களோன்னுதான் பயப்படறேன்.

ஆரோ: ஆல்ரைட்! உங்களாலேதான் என்னை நம்ப முடியாது. ஆனா நான் உங்களை நம்பறேன். ஏன்னா நீங்க ஒரு பைத்தியக்காரர்; அதனாலே நான் நம்பறேன். இந்த ரெக்கார்ட்ஸ் எல்லாம் நீங்களே வைச்சுக்குங்க.... ம்...எடுத்துக்குங்க! (டேபிள் மீது பெட்டியை வைக்கிறார்) அந்தப் பக்தன் இருக்கிற இடத்தைச் சொல்லுங்க. நான் அவரை ஏதோ ஒண்ணு கொடுத்து விலைக்கு வாங்கினா இந்தச் சாட்சியங்களைத் திரும்ப என்னிடம் கொடுங்க. தாமஸை நான் போலீஸிலே ஒப்படைச்சா நீங்க இதை யெல்லாம் என் கிட்டக் கொடுக்க வேண்டாம். கேஸை நடத்துங்க. இந்தச் சாட்சியங்கள் இருந்தா கேஸை நீங்க ஜெயிக்கலாமே! இதோ கீதா குப்புசாமி கிட்டே வாங்கின வாக்குமூலத்தையும் இந்தப் பெட்டியிலே வைக்கிறேன்.

அரு: அந்தப் பக்தனைவிலைக்கு வாங்க முடியலேன்னு, அல்லது நீங்க போலீஸுக்குப் போனா நான் இதையெல்லாம் என் கிட்டேயே வைச்சுக்கிட்டுக் கேஸுக்குப் பயன்படுத்தலாமா?

ஆரோ: ஓ எஸ். ஆனால் அந்தப் பக்தனை விலைக்கு வாங்கிட்டா இந்தச் சாட்சியங்களை எல்லாம் என் கிட்டே திருப்பிக் கொடுத்திடணும். உங்க வார்த்தை எனக்குப் போதும்.

அரு: ஒப்புக்கொள்கிறேன். ஆனா மிஸ்டர் ஆரோக்கியசாமி, அந்தப் பக்தரை விலைக்கு வாங்கற முயற்சியிலே நீங்க தோல்வியைத்தான் அடையப் போறீங்க!

ஆரோ: நான் வியாபாரத்திலே தோல்வி அடைஞ்சதே கிடையாது. அவர் விலாசம்?

அரு: மாசிலாமணி, பன்னிரண்டு, மேலத் தெரு, செங்கல்பட்டு.

ஆரோ: சரி, நான் போய் அந்த வியாபாரத்தையும் முடிச்சுக்கறேன்.

அரு: அந்த வியாபாரம் உங்களை மூழ்கடிச்சுடும்.

ஆரோ: என் பணம் படகாகப் பயன்படும்!

(தொடரும்)

## பூரிக்கு ஒரு புதிய கோயில்

பூரி என்ற சொல்லோடு இணைந்தது ஜகந்நாத். பூரி-ஜகந்நாத் என்று புகழ்பெற்றது. இந்த க்ஷேத்திரம் மகோததி என்ற அழகான கடற்கரையைக் கொண்டது. ஸ்வர்க்கத்வார் என்பது இங்கு ஸ்நான கட்டம்.

ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களின் அருளாணையையும் பெரும் பொருளுதவியையும் கொண்டு, இந்த ஸ்நான கட்டத்தில், அழகானதொரு மூவர் கோயில் எழும்புகிறது. நான்கு சிடர்களுடன்கூடிய ஆதிசங்கர பகவத் பாதருக்கும், சைதன்ய மகாப் பிரபுவுக்கும் கீத கோவிந்தம் பாடிய ஜயதேவர்-பத்மாவதிக்கும் கலைச் சிறப்பு மிகுந்த கோயில்கள் உருவாகியுள்ளன.

ஸ்ரீ பெரியவர்களது ஆக்ஞைப் பிரகாரம் வருகிற சித்திரை மாதம் 23-4-75 அன்று கும்பாபிஷேகம் நடத்துவது என்றும் உறுதியாகிவிட்டது. ஆஸ்திக அன்பர்கள் அனைவரும் தாராளமாகப் பொருளுதவி செய்து, பகவதநுக்கிரகத்துக்குப் பாத்திரர்களாக வேண்டும். நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி: ஸ்ரீ பி.என்.வெங்கடேச அய்யர், தலைவர், சங்கர பகவத்பாத சேவாசமிதி, பீச் ரோடு, ஸ்வர்க்கத்வார், பூரி - 752001.

# தோசை விலை குறையுமா?



முரளி கஃபே வேங்கடேசுவரன்



குரு - ரால்ஃப் நாடார்



சில வாரங்களுக்குமுன் சென்னை நகர ஹோட்டல்கள் முன்னால் பண்டங்களின் விலையைக் குறைக்கப் போராட்டம் நடத்திப் பரபரப்பை உண்டாக்கினார் சீனிவாசன்!

இவர் போராட்டம் கலப்படத்தில் ஆரம்பித்தது! முன்பு ஒரு முறை கிண்டி இன்ஜினீயரிங் கல்லூரியில், ஒரு பகுதிக் கட்டடம் இடிந்து விழுந்து சில தொழிலாளிகள் மாண்டபோது, இவர், அந்த விழுந்த பகுதிக் கட்டட ஆராய்ச்சியில் இறங்கினார். கலப்பட சிமெண்டு என்று கண்டு பிடித்தார். அரசிடம் புகாரும் செய்தார். அப்புறம் இவரே வேறு இடத்தில் பெரிய அளவில் சிமிண்டுக் கலப்படம் தொழிலாகவே நடப்பதைக் கண்டுபிடித்துக் கொடுத்தார். அந்த வழக்கு இன்னும் நடக்கிறது.



ஏகலைவன் -
எம். கே. சீனிவாசன்

போன ஆண்டுக்கு முந்திய ஆண்டு தீபாவளி ஸ்நானத்துக்காகக் கடையில் வாங்கின எண்ணெய் கலப்படமாக இருந்து குழந்தைகளுக்கெல்லாம் ஜுரம் வந்ததால், அந்த எண்ணெயைப் பரிசோதனைக்கு அனுப்பிக் கலப்படம் என்று தெரிந்து கொண்டார். கலப்படத்துடன், பொய் நிறுவைக் கற்கள் வைத்துப் பொது மக்களை ஏமாற்றுபவர்கள் மீதும் எச்சரிக்கைக் கணைகள் தொடுக்க ஆரம்பித்தார். இந்த எச்சரிக்கை, போராட்டங்களைச் சரியான அஸ்திவாரத்துடன் நடத்த, ''பண்டம் வாங்குவோர் பாதுகாப்புச் சங்கம்'' என்ற ஸ்தாபனத்தையும் சென்ற ஆண்டு பதிவுசெய்து கொண்டார். அதற்கு எம். கே. சீனிவாசன்தான் நிரந்தரத் தலைவர்.

அவருடைய ஆராய்ச்சி ஹோட்டல் பக்கம் திரும்பியது.

முதலில், கலப்படம், இரண்டாவது அளவுகள், மூன்றாவது விலை நிர்ணயம்!

''சட்னிக்கு யார் பொரிகடலையையும் தேங்காயையும் உபயோகிக்கிறார்கள்? பூசணிக்காயின் மேல் தோலையும் தேங்காய்ப் பிண்ணாக்கையும் சேர்த்து அரைத்துத் தாளித்து நமக்கு வழங்குகிறார்கள். நம்முடைய நாக்கையும் கண்களையும் ஏமாற்றுகிறார்கள்'' — இது சீனிவாசனுடைய முதல் வாதம்.



"ஒரு படி அரிசி மாவுக்கு நூற்றி ஐம்பது இட்டிலிகளோ எண்பத்தைந்து தோசைகளோ தயாரிக்கலாமே! ஓர் இட்டிலி பதினைந்து பைசா என்று விற்பது நியாயமா?" — இது அவருடைய அடுத்த வாதம்.

"மத்தியப் பிரதேசக் காட்டுப் பருப்பு ஒரு ரகம் ஒரு படி ஒரு ரூபாய். துவர்க்கும். நாளடைவில் பக்கவாதம் வரும். அதைப் போட்டுச் சாம்பார் வைத்து, துவர்ப்புத் தெரியாமல் வெல்லம் போட்டு விடுகிறார்கள். நாம் அதை விழுங்கி வைக்கிறோம். நம் உடல் ஆரோக்கியம் என்ன ஆவது?..." இது அவருடைய மூன்றாவது கேள்வி.

இந்த அடிப்படையில், ஹோட்டல்காரர்கள், விலைகளை ஏற்றிக் கொண்டே போவது அநியாயம் என்று மறியல் செய்து இரண்டு தடவைகள் கைதாகியிருக்கும் 'பண்டம் வாங்குவோர் பாதுகாப்புச் சங்க'த் தலைவர் சீனிவாசனின் புதிய எதிரி: பெண்களிடமிருந்து அவர்கள் கூறைப் புடவைகளைக் கூட அடமானமாக ஏற்றுக் கொண்டு அநியாய வட்டிக்குக் கடன் கொடுப்பவர்கள். இந்த மாதிரி, மக்கள் நலனுக்குப் பாடுபடத் தமக்கு வழிகாட்டியவர் அமெரிக்க நாட்டு ரால்ஃப் நாடார் என்பதைக் குறிப்பிடுகிறார். ஆனால் ரால்ஃப் நாடார் பெற்றது போன்ற மகத்தான வெற்றிகளைத் தாம் இனிமேல் தான் முயன்று அடைய வேண்டும் என்பதையும் இவர் ஒப்புக் கொள்ளத் தயங்குவதில்லை.

**திரு எம். கே. சீனிவாசனின் ஓட்டல் பண்டங்களின் விலை குறைப்புப் போராட்டத்தைப் பற்றி, சென்னை திருவல்லிக்கேணி பைக்கிராஃப்ட்ஸ் ரோட்டில் நீண்ட காலமாக ஓட்டல் தொழில் நடத்திவரும் 'முரளி கேஃப்' அதிபர் திரு பி. கே. வேங்கடேசவரன் அவர்களின் அபிப்பிராயத்தைக் கேட்டோம். திரு வேங்கடேசவரன் சொன்னார்:**

சீனிவாசன் அவர்களின் போராட்டம் 'நியூஸ் வால்யூ' உள்ளதாக இருக்கலாமே தவிர, உண்மையுடன், நடைமுறையுடன் ஒத்து வரும் விஷயம் இல்லை.

1972ல் நயம் புழுங்கரிசி மூட்டை எண்பது ரூபாய்க்கு வாங்கினேன். இப்போ மட்டமான புழுங்கலரிசி மூட்டை இருநூற்று எண்பது ரூபாய்! இரண்டு இட்டிலி விலையை இருபது பைசாவிலிருந்து இருபத்து ஐந்து பைசாவாக உயர்த்தியிருப்பது நியாயமா? அநியாயமா? நீங்களே சொல்லுங்கள்!

சர்க்கரை மூட்டை முந்நூற்றைம்பது ரூபாயிலிருந்து அறுநூறு ரூபாய்க்கு உயர்ந்திருக்கிறது. காப்பிப் பொடி கிலோ ஒன்பதிலிருந்து பதினாறாகியிருக்கிறது. பால் விலையோ கேட்க வேண்டாம்! இந்த மட்டில் நாங்கள் காப்பி கொடுக்கிறோமே என்று நினைத்துப் பார்க்க வேண்டாமா?

ஓர் உதாரணம் சொல்றேன். கேளுங்கோ! ஒரு 'கஸ்டமர்' வருகிறார் என்று வைத்துக் கொள்வோம். அவர் இரண்டு இட்டிலி, ஒரு தோசை, ஒரு காப்பி சாப்பிடுவார்! இவருக்கு உட்கார நாற்காலி, சாப்பிட மேஜை, மேலே ஃபான், தேவையானால் விளக்கு, ஆச்சா?

மேஜை துடைக்கும் பையன் மேஜையைத் துடைக்கிறான். தண்ணீர் கொண்டு வரும் பையன் தண்ணீர் டம்ளரை வைக்கிறான். இப்பவே இரண்டு நபர், ஒரு பாத்திரம் ஆகிறதா? கணக்கு வைச்சுக்குங்கோ!

சர்வர் ஒரு பெரிய பிளேட்டில் இரண்டு இட்டிலி, சின்ன இரண்டு தட்டுக்களில் சாம்பார், சட்னி கொண்டு வருகிறான். இப்போ, மூணு ஆசாமி, நாலு பாத்திரங்கள்.

இப்போ எல்லாம் எல்லோருக்கும் எல்லாம் சூடாய்த் தேவை. தோசை போடுகிறோமோ இல்லையோ, தோசைக் கல் காய்ந்து கொண்டே இருக்க வேண்டும். காஸ், விறகு, காலியாகிக் கொண்டேயிருக்கிறது.

தோசைக்கு ஒரு பிளேட், சட்டினி சாம்பாருக்கு இரண்டு பாத்திரங்கள். இப்போ மொத்த பாத்திரம் ஏழு. அப்புறம் காப்பி. டபரா டம்ளர் இரண்டு. மொத்த பாத்திரம் ஒன்பது. இதைக் கழுவ வேறு ஆள். ஆக ஒரு வாடிக்கைக்காரரைக் கவனிக்க நாலு ஆட்கள், ஒன்பது பாத்திரங்கள், மேஜை நாற்காலி, ஃபான், லைட்!... இந்தச் செலவுக்கெல்லாம் எங்கே போவோம்? ஒரு படி அரிசி மாவுக்கு நூற்றுமுப்பத்தைந்து இட்டிலி என்று ஏட்டில் எழுதிக் காட்டலாம்! அரிசிமா அப்படியே இட்டிலி ஆகிவிடுமா? புரிகிறதா?

அப்புறம் இந்த விற்பனை வரி விவகாரம் இருக்கிறதே! அது பெரிய பகாசுர விஷயம். மொத்த விற்பனையில் இவ்வளவு சதம் என்று கணக்கு உண்டு. ஆனால் அதிகாரிகள் தங்கள் அதிகாரத்தைப் பிரயோகித்து அதிகமாகவே வரி நிர்ணயிப்பார்கள். அப்பீல் செய்து பார்க்கலாம். அப்பீல் முடிய வருஷக்கணக்காகலாம். ஆனால் நாம் கட்ட வேண்டியதை அவ்வப்போது கட்டியாக வேண்டும். இல்லையோ ஹோட்டலை ஜப்தி செய்ய ஆர்டருடன் வருவார்கள். இப்போ என்னுடைய நாலு அப்பீல்கள் 'பெண்டிங்'கிலே இருக்கு.

கிளீனர், சர்வர், வாட்டர்பாய்னு எத்தனையோ பேர் ஹோட்டலிலே வேலை செய்யறா. இவர்கள் எல்லோருமே, பெட் காப்பியிலிருந்து, நைட் மீல்ஸ் வரை, இங்கேதான் இலவசமா சாப்பிடறா! இவர்களுக்குத் தலா சராசரி நாள் ஒன்றுக்குச் சம்பளத்தைத் தவிர ஆறு, ஆறரை ரூபாய் ஆகும். ஆனால் விற்பனை வரி கணக்கிலே இவர்களுக்காகத் தள்ளுவது தலைக்கு ஒண்ணேகால் ரூபாய்!

அப்புறம் முன்னெல்லாம் பாத்திரங்களுக்கு ஈயம் பூச அறுபது ரூபாய் வரைதான் கொடுப்பேன். இப்போ நானூறு ரூபாய் ஆகிறது. ஹோட்டலுக்குச் சப்ளை செய்கிற நகரசபை ஜலத்துக்கு மீட்டர் உண்டு. ஆகவே, ஜலத்துக்கும் துட்டுக் கொடுக்கிறோம்!

எங்களை அறியாமல் நாங்கள் வாங்கும் மொத்தச் சாமான்களில் ஏதாவது கலப்படம் இருக்கலாம்! ஆனால் எங்களால், தேங்காய் புண்ணாக்கையும், பூசணிக்காய்த் தோலையும் சேர்த்து அரைத்துச் சட்னி என்று சொல்ல முடியாது. அப்படிச் செய்தால், எங்களால் தொடர்ந்து தொழில் நடத்த முடியுமா?

ஒரு விஷயம் நீங்க ஞாபகத்திலே வைச்சுக்கணும்! நாங்க விலை கொடுத்து வாங்கற சாமான்கள் விலை மணிக்கணக்கில் தேள் விஷமாக ஏறிக் கொண்டு போகிறது. நாங்கள் விற்கும் பண்டங்கள் விலை, மாதக்கணக்கில் ஒரு நிலையில் நிற்கிறது!... பேட்டி: **பட்டினத்தார்**

## திருப்பணி நிதி வேண்டுகோள்

வள்ளல் பாரி வாழ்ந்த பிரான் மலைக்கு 6 மைல் தொலைவிலும், முருகன் திருத்தலங்களில் ஒன்றான குன்றக்குடிக்கு 15 மைல் தொலைவிலும் பாலாற்றங்கரையில் அமைந்திருக்கும் சிவகங்கை தேவஸ்தானத்தைச் சேர்ந்த முறையூர் அருள்மிகு மீனாக்ஷி சொக்கநாதர் ஆலயம் புதுப்பிக்கப்பட்டு வருகிறது. பக்த அன்பர்கள் பெருமளவில் பொருளுதவி செய்யும்படி கேட்டுக் கொள்ளுகிறோம். குடமுழுக்கு நடத்த உங்கள் உதவியை வேண்டுகிறோம்.

முகவரி : **எஸ். அழகப்பன்**

தலைவர், திருப்பணிக்கமிட்டி

**97-C, தெற்கு ஆவணி மூல வீதி**

**மதுரை - 625001**



சென்னை திரு P. N. சுப்ரமணியன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி **P. S. சந்திர மௌலி M.A.,CAIIB.** (ஆபீஸர், யுனைடெட் கமர்ஷியல் பாங்க், சென்னை)க்கும், திரு R. ராஜகோபாலன் அவர்கள் குமாரத்தி சௌ. சாந்தி B. A.க்கும், சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்

# ௨ ஃபாஸ்ஃபோமின் டானிக்...









## ஃபாஸ்ஃபோமின் அயன்

**பெண்களுக்கான**
**அயன் டானிக்**

ஃபாஸ்ஃபோமின் அயன் சத்து மிக்க சிவப்பு இரத்தம் உருவாகக் காரணமாயிருந்து உதவுவதுடன் சக்தியையும் பெருக்குகிறது. பெண்களுக்கான ஃபாஸ்ஃபோமின் அயனைத் தவறாமல் தினம் உட்கொள்ளுங்கள்.

## ஃபாஸ்ஃபோமின் விடமின்

**குடும்பத்திற்கான**
**விடமின் டானிக்**

ஃபாஸ்ஃபோமின் குடும்ப ஆரோக்கியத்திற்குத் தேவையான விடமின் பி காம்ப்ளெக்ஸ் மற்றும் பல்வேறு கிளிஸரோபாஸ்பேட்டுகள் அடங்கிய விடமின் டானிக்காகும்.

குடும்பத்தினர் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ 2 **ஃபாஸ்ஃபோமின்** டானிக்

ஃபாஸ்ஃபோமின் அளிக்கும் இரு டானிக்குகளும் பசியைத் தூண்டி, வலிவைப் பெருக்கி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் கூட்டுவனவாகும்.

SQUIBB® SARABHAI CHEMICALS LTD.

ஈ.ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பரேட்டட் அவர்களின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும். எஸ்.ஸி.எல். இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

SHILPI SC 8A/74 TAM

# விடியாத இரவுகள்

சோம. மகாதேவன்

கிழவன் வீரையா திண்ணையிலே உட்கார்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான்.

தெப்பமாக நனைந்து, எங்கிருந்தோ வந்து சேர்ந்தான் கிழவனது மகன் நாகப்பன்.

''மேலக்குண்டுலே ஓர் உழவைப் போட்டு, நாளைக்கே நாத்துப் பாவிப் போடலாம்'' என்றான் வீரையா, மகனைப் பார்த்ததும்.

நாகப்பன் நெற்றியில் வடிந்த நீரை வழித்துவிட்டவாறு தகப்பனைத் திரும்பிப் பார்த்தான்.

''அதெல்லாம் உழுதுக்கலாம். இப்ப நிலத்துக்காரரு கந்தசாமி, பஸ்ஸிலே வந்து இறங்கினவர், அங்கேதானே மழைக்கு ஒதுங்கி நிக்கறாரு. இங்கேதான் வருவாரு. எந்தப் பேச்சிலேயும் பிடி கொடுத்துப் போடாதே. ஆமா, சொல்லிட்டேன்....

''நிலத்தைக் கிரயம் பேசறதா பேச்சு அடிபடுது. யாருக்கு வித்தாலும் கொண்டாலும் உழவடையைக் கண்டிப்பா விடமுடியாதுன்னு சொல்லிப் போடு'' என்று உத்தரவிடுவது போலச் சொன்னான் நாகப்பன்.

குரல் கேட்டு வீட்டுக்குள்ளிருந்து மருமகள் முனியம்மாளும் வந்துவிட்டாள்.

''ஊருக்குள்ளே நம்ம பங்காளிகளே எப்ப எப்பன்னு காத்துக்கிட்டிருக்காங்க. வர்ற மனுசன்கிட்ட எதுவும் விட்டுக் கொடுத்துப் பேசிப்பிடாதீங்க. பொழைப்புக் கெட்டுப் போகும்'' என்று அவளும் எச்சரித்தாள்.

வீரையா இருவரையும் திரும்பிப் பார்த்தான். வாயைத் திறக்கவில்லை.



முன்பு இந்த வீடு, கூரை வீடாக இருந்த போது, ஒரு மழை பெய்தாலும் நனையாமல் ஒண்டியிருக்க உள்ளே இடம் இருக்காது. இற்று விழும் கூரையைச் செப்பனிட்டுக் குடியிருக்க வகை இருந்ததா? பாதி கரைந்து போன திண்ணையிலே இப்படித்தான், முழங்கால்களைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தான் வீரையா. அவனையும் ஒரு பொருட்டாக எண்ணி, தேடி வந்து, பக்கத்திலே உட்கார்ந்து பேசினார் கந்தசாமி. அப்போது மதுரையிலே அவருக்குப் பலசரக்குக் கடை வியாபாரம் விரிவாக நடந்துகொண்டிருந்தது.

முதல் சந்திப்பிலேயே, தமது இரண்டு ஏக்கர் நன்செய் நிலத்தையும் வீரையாவிடம் உழவடைக்கு ஒப்படைத்தார். முதல் வருடம் முழுதும் விவசாயச் செலவுக்கென்று முன் பணமும் கொடுத்தார்.

கந்தசாமி கைகொடுத்த போதே வீரையாவின் வாழ்க்கையில் நல்ல காலம் பிறந்தது. அப்போது கந்தசாமியைப் பார்க்கும் போதெல்லாம் வீரையாவின் கண்களில் நீர் மல்கும். தெய்வத்தின் நினைவு வரும்!

அறுவடையின்போது, களத்துக் கங்காணத்துக்கெல்லாம் கந்தசாமி வருவதில்லை. ஒவ்வொரு போகத்துக்கும் தலையடி நெல்மூட்டைகளாகி, வண்டியிலேறி, மதுரை போய்ச் சேர்ந்துவிடும்.

வீரையாவுக்கும் குடும்பம் என்று ஏற்பட்டது. அயராது உழைத்தான். குத்தகை நெல் கொடுத்தது போக, போதுமான அளவுக்கு மிஞ்சியது. வீட்டையும் இப்படிக் கெட்டிக் கட்டடமாகக் கட்டிக் கொண்டான். மூத்த மகள் பாலம்மாளை, ஆசை தீரச் செலவழித்துக் கட்டிக் கொடுத்தான். இரண்டு வருடங்களுக்கு முன்னதாக மகன் நாகப்பனுக்கும் மணம் முடித்து வைத்தான். போன வருடம்தான் ஓர் ஏக்கருக்கு ஊர் மந்தையிலே புன்செய்காடு ஒன்றையும் வாங்கிப் போட்டிருக்கிறான். மருமகளை இந்த வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்த பெருமையோடு, வீரையாவின் உயிரோடு இணைந்திருந்தவள் போய்ச் சேர்ந்து விட்டாள்.

கந்தசாமி தேடி வருகிறாராம். தூறலும் நின்று விட்டது.

வீரையா தெருவையே பார்த்துக் கொண்டிருந்தான்.

தலையில் துண்டைப் போட்டுக் கொண்டு கந்தசாமியும் வந்து விட்டார்.

வீரையா பரபரப்புடன் முற்றத்தில் இறங்கி வரவேற்புக் கொடுத்துவிட்டு, வீட்டுக்குள் திரும்பி, ''அந்தப் பாயை எடுத்தாந்து போடுடா!'' என்று குரல் கொடுத்தான்.

பாயோடு திண்ணைக்கு வந்த நாகப்பன், ''ஐயா வாங்க!'' என்று பணிவாகவே வணக்கம் சொல்லிவிட்டு, திரும்பிச் சென்று, உள் அறையில் முனியம்மாளோடு நின்றான்.

கந்தசாமி தலைநிமிர்ந்து வீரையாவைப் பார்த்தார்.

''நானே வலிய வந்துதான் நிலத்தை உங்கிட்டே ஒப்படைச்சேன். இப்பவும் நானே வந்து பேசணும்னு தோணிச்சு. நான் கொஞ்சம் கொஞ்சமா குறைஞ்சுக்கிட்டு வர்றதும் உனக்குத் தெரிஞ்சிருக்கும்.''

'' உங்களுக்கும் இப்படி ஒரு கஷ்டம் வரும்னு நான் எதிர்பார்க்கலீங்க'' என்றான் வீரையா.

''வந்திருக்கு. என்ன செய்யறது? கல்யாண காரியத்துக்காக நம்ம நிலத்தைக் கிரயம் செய்யறதுன்னு முடிவுக்கு வந்திருக்கேன். உங்கிட்டே அந்த அளவுக்குப் பணம் தேறுமா?'' என்று கேட்டார் கந்தசாமி.

''ஏதுங்க? என்னமோ இல்லேயிங்கிற சொல் இல்லாமல் காலம் ஓடுது. இந்த வீட்டைக் கட்டினதிலே.... கொத்தன் 'கால்'லே ஆரம்பிச்சு 'அரை'க்கு மேலே கொண்டு போயிட்டான்.....''

''அப்ப.... வேறே யாருக்கும் கிரயம் செய்யறதிலே உங்களுக்குச் சம்மதம்தானே?'' என்று கேட்டார் கந்தசாமி.

''இருபது வருஷமா நிலத்தை உழுதுகிட்டு இருக்கோம். யாருக்கு வேணும்னாலும் பேசி முடிங்க. உங்களுக்குக் கொடுக்கிற குத்தகையை அவங்களுக்குக் கொடுத்துட்டுப் போறோம். யாருக்காகவும் உழவடையை விட்டுக் கொடுக்க முடியாதுங்க'' என்று நாகப்பன் வெளியே வந்து சொன்னான்.

'' ரொம்பவும் நொந்துபோன நிலைமையிலே வந்து உட்கார்ந்திருக்கேன். எனக்கு வேறே பாதை தெரியலே.''

வீரையா வேறு பக்கமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். ''உங்களுக்கு உதவணுங்கற எண்ணம் இருக்குங்க. ஆனா....ஆனா...'' என்று பயத்துடன் இழுத்தான் வீரையா.

''வாரேன், வீரையா ?'' என்று மட்டும் சொல்லிவிட்டுக் கந்தசாமி நடந்தார்.

''அப்படி விட்டுக் கொடுத்துப் போடுற நெனப்பு இருந்தா, இங்கே யாருக்குமே குடியிருப்பு இல்லே. இதையும் திண்ணமா நினைச்சுக்கோ'' என்று நாகப்பன் கோபமாக வீரையாவைப் பார்த்துச் சொல்லிவிட்டு, மறுபடி வீட்டுக்குள் சென்றான்.

வீரையாவுக்கு ஆத்திரமாக வந்தது.

இன்றைக்கு மகன் தலையெடுத்துவிட்ட போது, இவன் இரக்கப்பட்டு என்ன செய்ய முடியும் ?

அந்த நீண்ட இரவு முழுவதிலும், கந்தசாமியும் அவர் மனைவி வள்ளியம்மாளும் கண்ணுறங்கவேயில்லே.

''கிரயத்திலே அந்தக் கிழவனுக்கும் ஒரு பங்கு கொடுத்தா எழுதிக் கொடுக்க மாட்டானா? ஊருக்குள்ளே நாலுபேர்கிட்ட விசாரிச்சிங்களா ?'' என்று கேட்டாள் வள்ளியம்மாள்.

'' எல்லாம் கேட்டுப் பார்த்தாச்சு. விக்கற தொகையிலே நூத்துக்கு முப்பத்தஞ்சு உழவடைதாருக்குக் கொடுக்கணுமாம். மத்த செலவுகளும் நம்மோடதான் '' என்றார் கந்தசாமி விசனத்துடன்.

''அட பாவிங்களா ? அப்புறம் எந்தப் பணத்தை வைச்சு இப்ப என்ன செய்யறது? நாளை மறுநாளே சம்பந்தி வீட்டுக்காரங்க மறுபடியும் வருவாங்களே?'' என்று சொல்லிக் கலங்கினாள் அவள்.

கந்தசாமி ஒன்றும் பேசவில்லை. 'என்ன செய்வது' என்பதைப் பற்றித்தான் ஆழ்ந்த யோசனையில் இருந்தார்.

பொழுதும் விடிந்துவிட்டது.

''இதுக்கு மேலே என்னங்க? ஆண்டவன் விட்ட வழி!'' என்று சொல்லிவிட்டு வள்ளியம்மாள் வாசல் தெளிக்க எழுந்தாள்.

அப்போது வாசல் கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. கதவைத் திறந்தார்.

வாசற்படியில் கிழவன் வீரையா நின்று கொண்டிருந்தான்.

''வா.... வீரையா!'' என்றார் கந்தசாமி பரபரப்புடன்.

''......ஒரு முடிவோடு வந்திருக்கேன். உங்களுக்கு ஒரு இக்கட்டு தலைக்கு மேலே வந்து நிக்கறப்ப, உங்க நிலத்துலே உரிமை கொண்டாட மனசு ஒப்பலீங்க'' என்ற வீரையா மடியிலே சுருட்டி மடக்கி வைத்திருந்த காகிதத்தை எடுத்து, ''இந்தாங்க, எங்கிட்ட ஒப்படைச்ச நிலத்துக்கு விடுதலைப் பத்திரம்'' என்றவாறு அதைக் கந்தசாமியின் கையில் கொடுத்துவிட்டு, அப்படியே அவசரத்துடன் திரும்பினான்.

நிலத்தை நல்ல விலைக்கு விற்பதில் இனி தடங்கல் இருக்காது. நினைத்தது நினைத்தபடி நடந்துவிடும்.

''ஐயா!'' என்ற குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினார் கந்தசாமி.

வீரையாவின் மகன் நாகப்பன் வேகமாகவே வந்து நின்றான்.

''எங்கப்பன் இங்கே வந்தாரா ?'' என்று கேட்டான்.

''ஆமாம்!'' என்றார் கந்தசாமி திகைப்புடன்.

''சரிதான்! அவர் நிலத்தைப் பத்தி என்னமும் சொல்லி இருந்தாலும் எழுதியே கொடுத்திருந்தாலும் அதுதான் உறுதியின்னு நினைச்சிராதீங்க. இந்த உடல்லே உயிர் இருக்கிற மட்டும், நிலத்திலே வேறே யாரும் அடியெடுத்து வைக்கவிட மாட்டேன். இதையும் நிச்சயமா நினைச்சுக்குங்க'' என்றான் நாகப்பன் வெறியோடு.

''வீரையா விடுதலைச் சீட்டு எழுதிக்கொடுத்திருக்கானே !'' என்றார் கந்தசாமி நடுக்கத்துடன்.

''அதையும் மடியிலே வைச்சுக்கிட்டு, எழுதிக் கொடுத்தவனைத் தேடிப் பிடிச்சுக் கூட்டியாங்க. நானும் உன் குத்தகையா எழுதி வாங்கியிருக்கேன் !'' என்ற நாகப்பன் அதோடு வந்த வழியே திரும்பி நடந்தான்.

வம்பு வழக்கென்று வரும்போது கிழவனுடைய சாட்சியும் வேண்டுமே !

தன்னை வாழ வைத்த மனிதனுக்கு, நன்றி செலுத்திவிட்ட மன நிறைவோடு, மகனுக்கும் மருமகனுக்கும் பயந்து, திரும்பியே பார்க்காது, வடக்கேயல்லவா போய்க் கொண்டிருக்கிறான் கிழவன் வீரையா.

கந்தசாமிக்கு என்றைக்கு விடியப் போகிறது ?

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

